POPE'S

SECOND CATECHISM

OF

# TAMIL GRAMMAR.

Nineteenth Edition, 6,000 Copies.

தமிழ்

# இலக்கண வினாவிடை

இது

ஜி. யூ. போப்பையரால்

செய்யப்பட்டது.

பத்தொன்பதாம் பதிப்பு.

MADRAS:

THE CHRISTIAN LITERATURE SOCIETY.

S. P. C. K. PRESS, VEPERY.

1895

SECOND

# CATECHISM OF TAMIL GRAMMAR.

# இலக்கண நூல் சுருக்க வினாவிடை.

## I. ORTHOGRAPHY.

## முதலாவது: எழுத்ததிகாரம்.

### I. LETTERS.

### க. எழுத்தியல்.

1. Classes of letters.

*க.—தமிழ்ப்பாஷையின் எழுத்துக்கள் எத்தனை வகைப்படும்?*

உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய் யெழுத்து என மூவகைப்படும்.

2. Vowels.

*உ.—உயிரெழுத்தெவை?*

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ இப்பன்னிரண்டும் உயிரெழுத்தாம்.

உயிர் என்பது ஆவி.

3. Short Vowels.

௬.—இவற்றுள், குற்றெழுத் தெவை?

அ, இ, உ, எ, ஒ குற்றெழுத்தைந்தே.

குறில் எனவும்படும்.

4. Long Vowels.

௭.—நெட்டெழுத் தெவை?

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ நெட்டெழுத்தேழே.

நெடில் எனவும்படும்.

5. Demonstrative Vowels.

௮.—சுட்டெழுத் தெவை?

சொல்லுக்கு முதலில் பொருள்களைக் குறித்துக் காட்டும் அர்த்தத்திலே, தனித்து நிற்கும் அ, இ, உ சுட்டெழுத்தென்றும் பெயர் பெறும்.

அகரம் தூரத்தில் இருக்கிற பொருளையும், இகரம் சமீபத்தில் இருக்கிற பொருளையும், செய்யுளிலே வழங்கிய உகரம் மத்தியில் இருக்கிற பொருளையும் காட்டும்.

உதாரணம். அவன், இது, உவ்விடம்.

6. Interrogative Vowels.

௯.—வினா எழுத் தெவை?

ஆ, எ, ஏ, ஓ என்னும் உயிரெழுத்துகளும் யா என்னும் உயிர்மெய்யெழுத்தும் வினா எழுத்தென்று பெயர் பெறும்.

உ-ம். அவனா, எவன், ஏது, இவனோ, மரமோ, யாவை.

7. Consonants.

எ.—மெய்யெழுத்தெவை?

க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் இப்பதினெட்டும் மெய்யெழுத்தாம்.

ஒற்று, உடல், உடம்பு எனவும்படும்.

8. Hard Consonants.

அ.—இவற்றுள், வல்லெழுத்தெத்தனை?

க, ச, ட, த, ப, ற என வல்லெழுத்தாறும்.

வல்லினம் எனவும்படும்.

9. Soft Consonants. Nasals.

க.—மெல்லெழுத்தெத்தனை?

ங, ஞ, ண, ந, ம, ன என மெல்லெழுந்தாறும்.

மெல்லினம் எனவும்படும்.

10. Medial Consonants Liquids.

௧0.—இடையெழுத்தெத்தனை?

ய, ர, ல, வ, ழ, ள என இடையெழுத்தாறும்.

இடையினம் எனவும்படும்.

11. Primary and Secondary Letters.

௧௧.—இவற்றிற்கு வேறே பெயரும் உண்டோ?

தலையான எழுத்தாகும் உயிர் பன்னிரண்டும்,

மெய் பதினெட்டுமாகிய முப்பதும் முதலெழுத்தென்று பெயர் பெறும். மற்றைய எல்லா எழுத்துக்களும் சார்பெழுத்தெனப்படும்.

12. The Guttural.

கஉ.—ஆய்தம் ஆவதென்ன?

உயிராயும் மெய்யாயும் வழங்கப்படுகிற ஓர் எழுத்தாம்.

அதற்கு வடிவு ஃ அல்லது ஃ.

உ-ம். இஃது, அஃறிணை.

13. Vowel Consonants.

கங.—உயிர்மெய்யெழுத்தெவை?

பதினெட்டு மெய்மேலும் பன்னிரண்டு உயிருந் தனித்தனி ஏறிவருதலால் தோன்றிய இருநூற்றுப்பதினாறும் உயிர்மெய்யெழுத்தாம்.

உ-ம். ககர மெய்யாகிய க் என்பதன்மேல்
அகரம் ஏற க எனவும்,
ஆகாரம் ஏற கா எனவும்,
இகரம் ஏற கி எனவும் வரும்.

மற்றையவும் இவ்வாறே.

14. Prolongation of Sound.

கச.—அளபெடை என்பதியாது?

செய்யுளில் ஓசை குறைந்தவிடத்து எழுத்தை நீட்டிச் சொல்வதே அளபெடை என்றும்.

உ—ம். ஓதல் எ—தற்கு ஓஒதல என நெட்டெழுத்தோடே அதற்கினமான குற்றெழுத்து வந்ததும்; எடுப்பதும் எ—தற்கு எடுப்பதூஉம் என குறிலே நெடிலாகிப் பின்னர் அளபெடுத்ததும்; சங்கு எ-தற்கு சங்ங்கு என ஒற்றெழுத்து அளபெடுத்ததும் காண்க.

15. Short உ.

கரு.—குற்றியல் உகரம் என்பதியாது?

தனிக்குறில் ஒழிய மற்றைய எழுத்தின் கடையில் கு, சு, டு, து, பு, று வரில் அவ்வல்லெழுத்தின்மேல் இருக்கும் உ குற்றியல் உகரம் எனப்படும்.

உ—ம். நாகு, காசு, மாடு, எழுத்து, பண்பு, ஆறு என்பவற்றின் கடைசியில் இருக்கும் உ குற்றியல் உகரமாம்.

மற்றைய உகரம் முற்றுகரம் எனப்படும்.

16. Quantity.

கசு.—மாத்திரை ஆவதென்ன?

கண்ணிமைப்பொழுதும், கைந்நொடிப்பொழுதும் மாத்திரை எனப்படும்.

ஒற்றுக்கும், குற்றியல் இகரத்திற்கும், குற்றியல் உகரத்திற்கும், ஆய்தத்திற்கும் அரைமாத்திரையும், குறிலுக்கு ஒரு மாத்திரையும், நெடிலுக்கு இருமாத்திரையும், உயிரளபெடைக்கு மூன்றுமாத்திரையுமாம்.

17. Interchange.

கஎ.—போலி என்பதென்ன?

ஔகாரத்திற்கு ...................... அவ் என்றும்,
ஐகாரத்திற்கு ...................... அய் என்றும்,
ஙகாரத்திற்கு ...................... ஞ் என்றும்,
லகாரத்திற்கு ...................... ர் என்றும்,
மொழியீற்றுமகாரத்திற்கு ........ ன் என்றும்,
குற்றியலுகாரத்திற்கு .............. அர் என்றும்,
அகாரத்திற்கு ...................... ஐ என்றும்,

வந்து ஒத்துநடப்பது போலி என்றும்.

உ—ம். ஔவியம்—அவ்வியம்; வையம் — வய்யம்;
ஞண்டு — நண்டு; கலம் — கலன்;
மயல் — மையல்; குடல் — குடர்;
அரும்பு — அரும்பர்.

18. SANSKRIT LETTERS.

கஅ.—தமிழிலே வழங்கிவரும் வட எழுத்துக்கள் எவை?

க்ஷ, ஷ, ஸ, ஜ, ஹ முதலியவாம்.

உ—ம். பக்ஷம்—இது தமிழிலே பட்சம் எனவும், பக்கம் எனவும் வழங்கும்.

பாஷை ................ பாடை.
புஸ்தகம்................ புத்தகம்.
கஜம் ...................... கசம், கயம்.
மோஹம் ................ மோகம்.
ஹானி.................... ஆனி.

## II. COMBINATION OF LETTERS.

## உ. எழுத்துப்புணரியல்.

19. CHANGES OF LETTERS.

*கக.—விகாரம் என்பதென்ன?*

மொழியோடு மொழி வேற்றுமை, வழியிலாவது, அல்வழியிலாவது; பொருந்தும்பொழுது நிலைமொழியின் ஈற்றெழுத்தாகிலும் வருமொழியின் முதலெழுத்தாகிலும் அவ்விரண்டெழுத்துக்களுமாகிலும், திரிவதும் கெடுவதும் வேறே எழுத்துத் தோன்றுவதுமே விகாரம் என்னப்படும்.

20. CHANGES.

*உ0.—அவ்விகாரம் எத்தனைவகையாம்?*

தோன்றல், திரிதல் கெடுதல் என மூவகைப்படும்.

(க) இல்லாதவிடத்து எழுத்துண்டாகுவது தோன்றல்:

உ—ம். என் + இடத்தில் = என்னிடத்தில் எனபதில், ன் தோன்றிற்று.

(உ) ஒரெழுத்து மற்றோரெழுத்தாக மாறுவது திரிதல்:

உ—ம்., பால் + குடம் = பாற்குடம் என்பதில், லகரம் றகரமாக மாறியது.

(௩) இருக்கிற வீடத்து ஓரெழுத்து மறைவது கெடுதல்.

உ-ம். மரம் + வீடு = மரவீடு என்பதில், மகரம் மறைந்தது.

21. Inflected Combination.

உக.—வேற்றுமைச் சந்தியாவதென்ன?

நிலைமொழியின் இறுதியிலே, ஐ, ஆல், கு, இன், அது, கண் என்னும் உருபுகள் தொக்கும் விரிந்தும் வரப் புணர்வது வேற்றுமைச் சந்தியாம்.

உ-ம். கல்லால் எறிந்தான், கல் எறிந்தான் என்பதில், ஆல் என்னும் வேற்றுமையுருபு வெளிப்பட்டும், வெளிப்படாமல் மறைந்தும் வரப்பொருந்தியது.

22. Uninflected Combination.

உஉ.—அல்வழிச் சந்தியாவதென்ன?

வேற்றுமையல்லாத வழியில் நிலைமொழியும் வருமொழியும் புணர்வது அல்வழிச்சந்தியாம்.

உ-ம். வந்த மனிதன்.

§ க. உயிரீற்றுச்சந்தி.

23. Vowel before Vowel.

உங.—உயிரெழுத்துக்குப்பின் உயிர்வந்தால் எவ்வாறாம்?

(க). இ, ஈ, ஐ என்னும் எழுத்துக்குப்பின்

உயிர் வந்தால் இடையிலே யகர ஒற்றுத் தோன்றும்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ—ம். மணி | + | அழகு | = | மணியழகு. |
| தீ | + | எரியும் | = | தீயெரியும். |
| மலை | + | அருவி | = | மலையருவி. |

(உ) ஏ என்னும் எழுத்துக்குப்பின் உயிர்வந்தால் வகர ஒற்றும், யகர ஒற்றும் தோன்றும்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ—ம். நானே | + | அரசன் | = | நானேயரசன். |
| சே | + | ஏறி | = | சேவேறி. |

(௩) மற்ற உயிராகிய அ, ஆ, உ, ஊ, எ, ஒ, ஓ, ஔ என்னும் எழுத்துக்குப்பின் உயிர் வந்தால் வகர ஒற்றுத் தோன்றும்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ—ம். மக | + | அரிது | = | மகவரிது. |
| பலா | + | அருமை | = | பலாவருமை. |
| திரு | + | உளம் | = | திருவுளம். |
| பூ | + | அணை | = | பூவணை. |
| எ | + | அன் | = | எவன். |
| நொ | + | ஆதிகம் | = | நொவதிகம். |
| கோ | + | அழகு | = | கோவழகு. |
| கௌ | + | அழகு | = | கௌவழகு. |

24. உ Before a Vowel or ய.

உச.—தனிக்குறில் அணையாத உகரத்துக்குப் பின் உயிர் ஆவது, யகரம் ஆவது வரில் எவ்வாறாம்?

உயிர் வந்தால் உகரம் கெடும். யகரம் வந்தால் உகரம் கெட இகரம் தோன்றும். அவ்வாறு தோன்றிய இகரம் குற்றியல் இகரம் என்னப்படும்.

உ-ம். செய்வது + அரிது = செய்வதரிது.
என்பது + யாது = என்பதியாது.

25. Any Letter after a Demonstrative or Interrogative Letter.

உரு.—சுட்டெழுத்துக்குப் பின்னும், எகர வினு வெழுத்துக்குப் பின்னும் மெய்யெழுத்து வந்தால் எவ் வாறும்?

அந்த மெய்யெழுத்து இரட்டிக்கும்; யகரம் வரில் வகரம் தோன்றும்.

உ-ம். அ + மனிதன் = அம்மனிதன்.
இ + பொழுது = இப்பொழுது.
எ + வகை = எவ்வகை.
அ + யானை = அவ்யானை.

26. Words in டு and று make ட்டு and ற்று.

உசு.—தனிக்குறில் அணையாத டு, று நிலைமொழி யினீற்றில் வரும்பொழுது எவ்வாறும்?

வேற்றுமை வழியில் பெரும்பாலும் ட், ற் இரட்டிக்கும். அல்வழியில் சிலவிடத்து இரட்டிக்கும்.

உ-ம். ஆடு + கால = ஆட்டுக்கால்.
ஆறு + மீன் = ஆற்றுமீன்.
குருடு + கண் = குருட்டுக்கண்.
அன்றியும், எருது + தோல் = எருத்துத்தோல்எனவும்,
வெருகு + கண் = வெருக்குக்கண்எனவும்
சிலவிடத்து த்,க் இரட்டித்துவரும்.

27. க, ச, த, ப Doubled.

உஎ.—உயிருக்குப்பின் க, ச, த, ப வரில் எவ் வாறும்?

உயிருக்குப்பின் வரும் க, ச, த, ப பெரும்பாலும் இரட்டிக்கும்.

உ-ம். மற்ற + காரியம் = மற்றக்காரியம்.
இந்த + சத்தம் = இந்தச்சத்தம்.
வாங்கி + தருவேன் = வாங்கித்தருவேன்.
சாரை + பாம்பு = சாரைப்பாம்பு.

ஆகிலும், வினைப்பெயருக்கும், விளிப்பெயருக்கும், வினைமுற்றுக்கும், பெயர் எச்சத்துக்கும், வினைத்தொகைக்கும், அது, இது, இவை, அவை, பல, சில, நீ, ஒரு, சிறு, அறு, எழு என்பவைகளுக்கும், மூன்றும் ஆறும் வேற்றுமையின் உருபுக்கும், உயிரீற்று உயர்திணைப் பெயருக்கும், பொதுப்பெயருக்கும் முன்வரும் க, ச, த, ப இயல்பாம்.

உ-ம். அவனை கொடுத்தான், கண்ணை கொடும், செய்தாய் தம்பி.
ஓடின குதிரை, குளிர்காற்று, அது பெரிது, சாத்தனொடு கொண்டான்.
எனது தலை, தம்பிகை, நம்பி தந்தான்.

28. Neuter plurals in அ take the increment அற்று or அத்து.

உ-அ.—அகரவீற்று அஃறிணைப் பன்மைப் பெயர் முன், வேற்றுமை வழியில், மெய் வரில் எவ்வாறும்?

இடையில் அற்றுச்சாரியையாவது அத்துச்சாரியையாவது தோன்றும்.

உ-ம். பல + ஐ = பலவற்றை.
சில + கு = சிலவற்றுக்கு.
மர + கோடு = மரத்துக்கோடு.

## § உ. மெய்யீற்றுச்சந்தி.

29. The final Consonant in a short syllable before a Vowel doubled.

உக.—தனிக்குறில் அணைந்த ஒற்றின்முன் உயிர் வந்தால் எவ்வாறும்?

அவ்வொற்றெழுத்து இரட்டிக்கும்.

உ—ம். மண் + அழகு = மண்ணழகு.

30. Letters doubled after ய், ர், ழ்,

௩0.—ய், ர், ழ் என்னும் எழுத்தின் முன் எவ்வெழுத்துக்கள் மிகும்?

(க) அடைமொழிகளினீற்றில் இருக்கும் ய், ர், ழ் என்னும் ஒற்றின்முன் வல்லினம் மிகும்.

உ—ம். பொய் + செல்வம் = பொய்ச்செல்வம்.
பாழ் + கொல்லை = பாழ்க்கொல்லை.
கார் + பருவம் = கார்ப்பருவம்.

(உ) வேற்றுமை வழியில் அவற்றின்முன் வல்லினம் மிகும்.

உ—ம். நாய் + கால் = நாய்க்கால்.
பூழ் + கால் = பூழ்க்கால்.
நீர் + குமிழி = நீர்க்குமிழி.

(ங) போய், ஆய் என்னும் வினை எச்சங்களுக்குமுன் வல்லினம் மிகும்.

உ—ம். போய்+சொன்னான்=போய்ச் சொன்னான்.
ஆய் +போயிற்று =ஆய்ப்போயிற்று.

31. ஞ, ம, ந DOUBLED.

௬௧.—ஞ, ம, ந எப்பொழுது இரட்டிக்கும்?

குற்றெழுத்தைச்சேர்ந்த யகாரத்தின் முன்னும், தனி ஐகாரத்தின் முன்னும் ஞ, ம, ந இரட்டிக்கும்.

உ-ம். மெய் + ஞானம் = மெய்ஞ்ஞானம்.
கை + மாற்று = கைம்மாற்று.
செய் + நன்றி = செய்ந்நன்றி.

32. CHANGES OF FINAL ம் INTO ங், ஞ் AND ந்.

௬௨.—மொழியீற்று மகரம் எவ்வாறு திரியும்?

மொழியீற்று மகரமானது ககர, சகரங்கள் வரில் முறையே ஙகரமாகவும், ஞகரமாகவும், தகர நகரங்கள் வரில் நகரமாகவும் திரியும்.

உ-ம். மனம் + களித்தது = மனங்களித்தது.
மரம் + சாய்ந்தது = மரஞ்சாய்ந்தது.
பாவம் + தீயது = பாவந்தீயது.
செம் + நெல் = செந்நெல்.

33. FINAL ம்.

௬௩.—மொழியீற்று மகரங் கெடுவதும் உண்டோ?

மகரத்தின் முன்னும், நகரத்தின் முன்னும் குறில் அணையாத மொழியீற்று மகரம் கெடும்.

உ-ம். காலம் + நெடிது = காலநெடிது.
மரம் + மெல்லியது = மரமெல்லியது.

34. CHANGES OF FINAL ண் AND ள் INTO ட்.

௬௪.—மொழியீற்று ணகரமும், ளகரமும் எவ்வாறு திரியும்?

**மொழியீற்று ணகாரமும், ளகாரமும் வேற்று மை வழியில், ககர சகர பகரங்கள் வரில் டகா மாம்.**

| | | | |
|---|---|---|---|
| உ-ம். மண் | + குடம் | = | மட்குடம். |
| மண் | + சாடி | = | மட்சாடி. |
| மண் | + பானை | = | மட்பானை. |
| முள் | + கூர்மை | = | முட்கூர்மை. |
| கள் | + சொரிந்தான் | = | கட்சொரிந்தான். |
| முள் | + புறம் | = | முட்புறம். |

35. CHANGES OF FINAL ன் AND ல் INTO ற்.

ஙரு.—மொழியீற்று னகாரமும், லகாரமும் எவ்வாறு திரியும்?

**மொழியீற்று னகாரமும், லகாரமும் வேற்று மை வழியில், ககர சகர பகரங்கள் வரில் றகா மாம்.**

| | | | |
|---|---|---|---|
| உ-ம். பொன் | + குடம் | = | பொற்குடம். |
| பொன் | + சாடி | = | பொற்சாடி. |
| பொன் | + பானை | = | பொற்பானை. |
| கல் | + கூடம் | = | கற்கூடம். |
| விரல் | + சிறிது | = | விரற்சிறிது. |
| விரல் | + புறம் | = | விரற்புறம். |

36. CHANGES OF FINAL ல் AND ள் INTO ன் AND ண்.

ஙசு.—மொழியீற்று லகரமும், ளகரமும் மகரம் வரில் எவ்வாகும்?

**மொழியீற்று லகாரமும், ளகாரமும் மகரம் வ ரில் முறையே னகாரமும், ணகாரமுமாம்.**

| | | | |
|---|---|---|---|
| உ-ம். கல் | + மலை | = | கன்மலை. |
| முள் | + முடி | = | முண்முடி. |

37. CHANGES OF FINAL ண் AND ள் INTO ட்.

௩எ.—ணகரத்திற்கும், ளகரத்திற்கும் முன் தகரம் வரில் எவ்வாறும்?

(க) ணகரத்திற்கும், ளகரத்திற்கும் முன் தகரம் வரில் வேற்றுமை வழியில் பெரும்பாலும் இரண்டும் டகரமாகும்.

உ—ம். மண் + தீமை = மட்டீமை.
முள் + தீது = முட்டீது

(உ) சிலவிடத்து இருவழியில் தகரம் டகரமாம்.

உ—ம். கண் + திறந்தான் = கண்டிறந்தான்.

(௩) ஒரு டகாம் கெடுதலும் உண்டு.

உ—ம். நாள் + தோறும் = நாடோறும்.

38. CHANGES OF FINAL ல் AND ன் INTO ற்.

௩அ.—னகரத்திற்கு முன்னும், லகரத்திற்கு முன்னும் தகரம் வரில் எவ்வாறும்?

(க) னகரத்தின் முன்னும், லகரத்தின் முன்னும் தகரம் வரில் வேற்றுமை வழியில் இரண்டும் றகரமுமாம்.

உ—ம். பொன் + தீமை = பொற்றீமை.
கடல் + திரை = கடற்றிரை.

(உ) அல்வழியில் சிலவிடத்து தகரம் றகரமாம்.

உ—ம். பொன் + தீது = பொன்றீது.

(௩) ஒரு றகரங் கெடுதலும் உண்டு.

உ—ம். பால் + தீது = பாறீது.

39. CHANGE OF ல் AND ந் INTO ன்ன் AND OF ள் AND ந INTO ண்ண்.

௩௯.—லகரத்தின் முன்னும், ளகரத்தின் முன்னும் நகரம் வரில் எவ்வாறும்?

(க) லகரத்தின் முன்னும், ளகரத்தின் முன்னும் நகரம் வரில், முறையே இரண்டும் னகரமும், ணகரமுமாம்.

உ—ம். நல் + நெறி = நன்னெறி.
தெள் + நீர் = தெண்ணீர்.

(உ) ஒரு னகரமும், ணகரமுங் கெடுதலும் உண்டு.

உ—ம். வானத்தில் + நின்று = வானத்தினின்று.
அருள் + நலம் = அருணலம்.

40. CHANGE OF ந் INTO ன் AND ண் AFTER THOSE LETTERS.

௪௦.—ணகரத்திற்கும், னகரத்திற்கும் முன் மொழி முதல் நகரம் எவ்வாறும்?

(க) தனிக்குறில் அணைந்த ணகரத்தின் முன்னும், னகரத்தின் முன்னும் நகரம் முறையே ணகரமாகவும், னகரமாகவும் திரியும்.

உ—ம். கண் + நீர் = கண்ணீர்.
தன் + நலம் = தன்னலம்.

(உ) தனிக்குறில் அணையாத ணகரத்திற்கும், னகரத்திற்கும் முன் நகரங் கெடும்.

உ—ம். கவண் + நெடிது = கவணெடிது.
கலன் + நெடிது = கலனெடிது.

## § ரு. செய்யுள் விகாரங்கள்.

41. Poetical changes.

சக.—செய்யுள் விகாரங்கள் எவை?

(க) வலித்தல், அதாவது மெல்லினத்தை வல்லினமாக்கல்:

உ—ம். குறுந்தாள் என்பது குறுத்தாள் எனவும் வரும்.

(உ) மெலித்தல், அதாவது வல்லினத்தை மெல்லினமாக்கல்:

உ—ம். புத்தி என்பது புந்தி எனவும் வரும்.

(ங) நீட்டல், அதாவது குற்றெழுத்தை நெட்டெழுத்தாக்கல்:

உ—ம். நிழல் என்பது நீழல் எனவும் வரும்.

(ச) குறுக்கல், அதாவது நெட்டெழுத்தைக் குற்றெழுத்தாக்கல்:

உ—ம். பாதம் என்பது பதம் எனவும் வரும்.

(ரு) விரித்தல், அதாவது இல்லாத எழுத்தை வருவித்தல்:

உ—ம். மக என்பது மகவு எனவும் வரும்.

(சு) தொகுத்தல், அதாவது உள்ள எழுத்தை நீக்கல்:

உ—ம். தொழாதார் என்பது தொழார் எனவும் வரும்.

(எ) முதற்குறை, அதாவது முதலெழுத்தை நீக்கல்:

உ—ம். தாமரை என்பது மரை எனவும் வரும்.

(அ) இடைக்குறை, அதாவது இடையெழுத்தை நீக்கல்:

உ-ம். ஒந்தி என்பது ஒதி எனவும் வரும்.

(ஆ) கடைக்குறை, அதாவது, கடையெழுத்தை நீக்கல்:

உ-ம். நீலம் என்பது நீல் எனவும் வரும்.
அரவம் எ-கு, அர்வு என்றும் அரா என்றும், நிலா எ-கு, நிலவு என்றும் இவைபோல் வனவும் வரும்.

§ ச. வடமொழிச்சந்தி.

42. Sanskrit changes.

சஉ.—வடமொழிகள் தமிழிலே ஒன்றோடொன்று பொருந்தும்பொழுது வடநூலின் சந்தியைப் பெறுமோ?

வடநூலின் சந்தியைப் பெறுவதும் உண்டு. அவற்றின் விவரமாவது.

(க) அ, ஆ முன், அ, ஆ இரண்டும் ஆகாரமாம்:

உ-ம். தேவ + ஆலயம் = தேவாலயம்.
சேநா + அதிபதி = சேநாதிபதி.

(உ) இ, ஈ முன், இ, ஈ வரில் இரண்டும் ஈகாரமாம்:

உ-ம். கிரி + ஈசன் = கிரீசன்.

(௩) உ, ஊ முன், உ, [redacted] வரில் இரண்டும் ஊகாரமாம்:

உ-ம். குரு + உபதேசம் = குரூபதேசம்.

(௪) அ, ஆ முன், இ, ஈ வரில் இரண்டும் ஏகாரமாம்:

உ-ம். சர்வ + ஈசுரன் = சர்வேசுரன்.

(௫) அ, ஆ முன், உ, ஊ வரில் இரண்டும் ஓகாரமாம்:

உ-ம். ஞான + உபதேசம் = ஞானோபதேசம்.

(௬) அ, ஆ முன், ஏ, ஐ வரில் இரண்டும் ஐகாரமாம்:

உ-ம். ஞான + ஐசுவரியம = ஞானைசுவரியம.

(௭) அ, ஆ முன், ஓ ஔ வரில் இரண்டும் ஔகாரமாம்:

உ-ம். தின + ஔதனம = தினௌதனம்.

எழுத்துப்புணரியல் முற்றும்.

## II. ETYMOLOGY.

## )ரண்டாவது: சொல்லதிகாரம்.

### 43. Parts of Speech.

சங.—தமிழ்ச்சொற்கள் எத்தனை வகையாம்?

பெயர், வினை, இடை, உரி என நான்கு வகையாம்.

44. Noun.

சச.—பெயர்ச்சொல்லாவதென்ன?

ஒரு பொருளின் பெயரைக் காட்டுவது பெயர்ச்சொல்லாம.

உ—ம். மனிதன், வீடு,
நன்மை, தீமை,
செய்தவன், வருவது.

45. Verb.

சரு.—வினைச்சொல்லாவதென்ன?

ஒரு பொருளின் தொழிலைக் காட்டுவது வினைசொல்லாம.

உ—ம். இரு, வந்தான், படிக்கிறார்கள்.

46. Particle.

சசு.—இடைச்சொல்லாவதென்ன?

தனித்து வழங்குதலின்றி, பெயர் வினைகளை அடுத்து வருவது இடைச்சொல்லாம.

உ—ம். அதுவே என்பதில் ஏ என்பதும்; அவனும் இவனும் என்பதில், உம் என்பதும் இடைச்சொற்களாம்.

47 Qualifying word, Adjective or Adverb

சஎ —உரிச்சொலலாவதெனன?

பெயர்ச்சொல்லையும் வினைசசொல்லையும் தழுவி அவைகளுக்குரிய குணத்தைக் காட்டுவது உரிச்சொல்லாம.

உ—ம். பெரிய அரசன்.
மிகவும் உழைத்தான்.

இவற்றில் பெரிய என்பதும, மிகவும் எனபதும் பெயரையும் வினையையும் தழுவிய உரிச்சொற்களாம்.

# I. NOUNS.

## க. பெயரியல்.

48. CLASSES OF NOUNS.

சஅ.—பெயர்ச்சொல் எத்தனை வகை ஆம்?

இடுகுறிப் பெயர் என்றும், காரணப் பெயர் என்றும் இரண்டு வகையாம்.

49. PRIMARY NOUNS.

சகூ.—இடுகுறிப் பெயர் ஆவதென்ன?

மரம், மலை என்பவற்றைப்போல ஒரு நிமித்தமுமின்றி வருவது இடுகுறி என்பதாம்.

50. APPELLATIVE NOUNS.

ருo.—காரணப்பெயர் ஆவதென்ன?

கணக்கு எழுதுகிறவனைக் கணக்கன் என்பதுபோல, ஒரு நிமித்தம்பற்றி வழங்குவது காரணப்பெயர் ஆம்.

51. CHARACTERISTICS OF NOUNS.

ருக.—பெயர்ச்சொல்லில் எத்தனை பொருளை அறியவேண்டும்?

பெயர்ச்சொல்லில் திணை, பால், இடம், வேற்றுமை என நான்கு பொருளையும் அறியவேண்டும்.

52. CLASS.

ருஉ.—திணை என்பது எத்தனை வகையாம்?

உயர்திணை, அஃறிணை என இருவகையாம.
தேவர், மனிதர், நாகர் உயர்திணையாம்.
மற்றைய பெயர் எல்லாம் அஃறிணையாம்.

53. Gender and Number.

௫௩.—பால் என்பது எத்தனை வகையாம்?

உயர்திணையாகிய, ஆண்பால், பெண்பால், பலர்பால் என மூன்றும், அஃறிணையாகிய ஒன்றன்பால், பலவின்பால் என இரண்டும்: ஆக ஐந்து வகையாம்.

இவற்றுள் ஆண்பால், பெண்பால், ஒன்றன் பால் ஆகிய மூன்றும் ஒருமை எனவும், பலர் பால் பலவின்பால் ஆகிய இரண்டும் பன்மை எனவும்படும்.

உதாரணம்.

| | ஒருமை. | பன்மை. |
| --- | --- | --- |
| உயர்திணை. | (க) ஆண்பால் அரசன். (உ) பெண்பால் மனைவி. | (ங) பலர்பால் புலவர். |
| அஃறிணை. | (ச) ஒன்றன் பால் வீடு | (ரு) பலவின்பால் மரங்கள். |

54. Person.

௫௪.— இடம் ஆவதெத்தனை?

தன்மை, முன்னிலை, படர்க்கை என மூன்றுமே.

இவற்றுள் (க) தன்னைத்தானே குறித்தது தன்மையிடம்:

உ-ம். { ஒருமை. நான், அடியேன்.
பன்மை. நாம், அடியோம்.

(உ) முன் நின்றவனைப் பார்த்துப் பேசுவது முன்னிலை:

உ-ம். { ஒருமை. நீ, கொடியாய்.
பன்மை. நீங்கள், தேவரீர்.

(ங) மற்றப் பொருளைக்குறித்துக் காட்டுவது படர்க்கை:

உ-ம். { ஒருமை. அவன், மனிதன், வீடு.
பன்மை. அவர்கள், மனிதர், வீடுகள்.

55. Case.

ருரு.—வேற்றுமை ஆவது என்ன?

பெயரின் இயல்பை வேறுபடுத்துவதேயாம். அது எட்டு வகைப்படும்.

56. 1st or Nominative Case.

ருசு.—முதலாம் வேற்றுமை எது?

திரிபில்லாத பெயரின் இயல்பே முதல்வேற்றுமை எனவும் எழுவாய் எனவும்படும்.

உ-ம். மனிதன், வீடு.

57. Signs of the Nominative.

ருஎ.—எழுவாயைக் குறித்துக் காட்டுகிற சொல்லுருபுகள் எவை?

என்பவன், என்பவள், என்பது,

என்பவர்கள், என்பவை முதலிய சொல்லுருபுகள் எழுவாயைக் குறித்துக் காட்டும்.

உ-ம். இராஜாவானவர் வந்தார்.

பொன்னன் என்பவன் வந்தான்.

இவை மற்ற வேற்றுமைகளின் உருபுகளையும் பெற்று வருவதும் உண்டு.

58. 2ND OR ACCUSATIVE CASE.

ருஅ.—இரண்டாம் வேற்றுமையின் உருபென்ன?

இரண்டாம் வேற்றுமையின் உருபு ஐ என்பதேயாம்.

அதின் பொருள் செயப்படுபொருளே.

உதாரணம்.

| பெயர். | உருபு. | இரண்டாம் வேற்றுமை. |
|---|---|---|
| மனிதன் | ஐ | மனிதனை உண்டாக்கினார். |
| தந்தை | ஐ | தந்தையைக் கனம்பண்ணினான். |
| பூ | ஐ | பூவை அணிந்தாள். |
| மரம் | ஐ | மரத்தை வெட்டினான். |
| வீடு | ஐ | வீட்டைக் கட்டினான். |
| நிலங்கள் | ஐ | நிலங்களை வாங்கினான். |

59. 3RD OR INSTRUMENTAL ABLATIVE.

ருகூ.—மூன்றாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

மூன்றாம் வேற்றுமையின் உருபுகள் ஆல்,

ஆன், ஒடு, ஓடு, உடன், கொண்டு என்பவை யாம்.

அவற்றின் பொருள் ஏது, உடனிகழ்ச்சி என இரண்டாம்.

உதாரணம்.

| பெயர். | உருபு. | மூன்றாம் வேற்றுமை. | பொருள். |
|---|---|---|---|
| மண் | ஆல், ஆன் | மண்ணால் / மண்ணான் } ஒரு குடத்தை வனைந்தான். | ஏது. |
| மந்திரி | ஒடு, ஓடு | மந்திரியொடு / மந்திரியோடு } அரசன் வந்தான். | உடனிகழ்ச்சி. |
| அவன் | உடன் | அவனுடன் மற்றவர்களும் இருப்பார்கள். | உடனிகழ்ச்சி. |
| வாள் | கொண்டு | வாள்கொண்டு வெட்டினான். | ஏது. |

60. 4TH OR DATIVE CASE.

சு௦.—நான்காம் வேற்றுமையின் உருபு என்ன?

நான்காம் வேற்றுமையின் உருபு கு என்பதேயாம்.

இதன் பொருள் கொடை, பகை, தகுதி, நிமித்தம் முதலியவையாம்.

உதாரணம்.

| பெயர். | உருபு. | நான்காம் வேற்றுமை. |
|---|---|---|
| தரித்திரர் | கு | தரித்திரருக்குப் பிச்சைகொடுத்தான் |
| வேதம் | கு | வேதத்திற்கு விரோதமான காரியம். |

நிமித்த பொருட்டுப்பொருளிலே ஆக என்

றும் நிமித்தம் என்றும், பொருட்டு என்றும் சொல்லுருபாக வரும்.

உ—ம். எனக்காகச் செய்தான்.
என்னிமித்தம் வந்தான்.
இதன்பொருட்டுப் போனான்.

61. 5TH OR ABLATIVE OF MOTION.

௬க.—ஐந்தாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

ஐந்தாம் வேற்றுமையின் உருபுகள் இல், இன் என்பனவாம். சிலவிடத்து நின்று, இருந்து என்னும் சொல்லுருபுகளும் வரும்.

அவற்றின் பொருள் நீக்கல், ஒப்பு, எல்லை, ஏது முதலியவாம்.

உதாரணம்.

| பெயர். | உருபு. | ஐந்தாம் வேற்றுமை. | பொருள். |
|---|---|---|---|
| மலை | இன் | மலையின் வீழருவி. | நீக்கல். |
| காக்கை | இல் | காக்கையில் கரிது களம்பழம். | ஒப்பு. |
| மதுரை | இன் | மதுரையின்வடக்குச் சிதம்பரம். | எல்லை. |
| கல்வி | இல் | கல்வியில் பெரியவன் [redacted] யன். | ஏது. |

62. 6TH OR GENITIVE CASE.

௬உ.—ஆறாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

ஆறாம் வேற்றுமையின் உருபுகள் அது, ஆது, அ, உடைய் என்பனவாம்.

அவற்றின் பொருள் கிழமைப்பொருளாம்.

உதாரணம்.

| பெயர். | உருபு. | ஆரும் வேற்றுமை. |
|---|---|---|
| தந்தை | அது | தந்தையது கை. |
| தன் | ஆது | தனது செவி. |
| தன் | அ | தனகைகள். |
| தந்தை | உடைய | தந்தையுடைய கட்டளை. |

63. 7th or Local Ablative.

சுஈ.—ஏழாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

ஏழாம் வேற்றுமையின் உருபுகள் இல் என்பதாம். இடத்தில் என்னும் சொல்லுருபும் வரும். கண், கால், அகம், புறம், உள், கீழ், மேல்; முன், பின், சார், அயல், புடை, திசை, தேம், தலை, இடை, கடை, வலம், இடம், உழை, பழி, உளி, வயின், வாய், பால் முதலியவும் ஏழாம் வேற்றுமையின் உருபுகளாகவும் வழங்கும்.

அவற்றின் பொருள் இடப்பொருளாம்.

உதாரணம்.

| பெயர். | உருபு. | ஏழாம் வேற்றுமை. |
|---|---|---|
| வீடு | இல் | வீட்டில் இருக்கிறான். |
| அரசன் | இடத்தில் | அரசனிடத்தில் வந்தான். |
| மணி | கண் | மணியின் கண் ஒளி. |

மற்றவையும் இவ்வாறே.

64. 8TH OR VOCATIVE CASE.

௬௪.—எட்டாம் வேற்றுமையின் உருபுகள் எவை?

எட்டாம் வேற்றுமையின் உருபுகள் பெயரின் ஈறு திரிதலும், கெடுதலும், மிகுதலும், இயல்பாதலும், ஈற்றயலெழுத்துத் திரிதலுமாம்.

அவற்றின் பொருள் அழைக்கப்படும் பொருளாம்.

உதாரணம்.

| பெயர். | உருபு. | எட்டாம் வேற்றுமை. |
|---|---|---|
| அம்மை<br>பிள்ளை | ஈறு திரிவது, | அம்மா.<br>பிள்ளாய். |
| அரசன் | ஈறு கெடுவது, | அரச. |
| மகன்<br>தம்பி | ஈறு மிகுவது, | மகனே.<br>தம்பீ. |
| தம்பி | ஈறு இயல்பாவது, | தம்பி. |
| மக்கள் | ஈற்றயல் திரிவது, | மக்காள். |

65. THE PARTICLE இன்.

௬௫.—இவ்வேற்றுமைகள் எந்தச் சாரியை பெறும்?

முதலாம் வேற்றுமையும் எட்டாம் வேற்றுமையும் தவிர மற்ற ௬வேற்றுமைகள் இன் சாரியையும் பெறும்.

உ—ம். தந்தையின், கையினால், பசுவினது.

66. NOUNS ENDING IN அம்.

௬௬.—மகர வீற்றுப் பெயர்ச்சொற்கள் எவ்வாறு வேற்றுமைப்படும்?

மகர வீற்றுப் பெயர்ச்சொற்கள் வேற்றுமைப் படும்பொழுது, அம் என்பது கெட அத்துச் சாரியை பெறும்.

உ—ம். மரம், மரத்தை.

67. THE NOUN எல்லாம்.

௬௭.—எல்லாம் என்பது எந்தச் சாரியை பெறும்?

எல்லாம் என்பது அற்றுச் சாரியையும், உம் என்னும் இடைச்சொல்லும் வரப்பெறும். சில விடத்து மகரம் கெடவும், பலர்பாலுக்குரிய விகுதி தோன்றவும் பெறும்.

உ—ம். எல்லாவற்றையும்,
எல்லா மனிதர்களும்,
மனிதர் எல்லாரும்.

68. NOUNS ENDING IN டு, று.

௬௮.—தனிக்குறில் அணையாத டு, று ஈற்றில் இருக்கிற பெயர்கள் எவ்வாறு வேற்றுமைப்படும்?

குற்றியல் உகரங் கெட்டு ட், ற் இரட்டிக்கும்.

உம். ஆடு, ஆட்டை.

69. TERMINATION OF THE PLURAL.

௬௯.—பன்மைப்பாலின் உருபுகள் எவை?

பன்மைப்பாலின் உருபுகள், அர், ஆர், கள், மார் என்பவையாம்.

னகரவீற்றுப்பெயர்களில் னகரம் ரகரமாகி, கள் என்னும் விகுதியைப் பெற்றும் பெறாதும் வேற்றுமையுருபுகளைப் பெறும்.

உ—ம். வீடுகள், தந்தையார்.
மனிதர், மனிதர்கள், குருமார்.

## 70. Paradigm.

எ0.—மேற்சொல்லிய வேற்றுமைகளைக் காட்டிய அட்டவணையைச் சொல்.

உதாரணம்.

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | தந்தை-தந்தையானவர். | தந்தைகள். |
| உ. | தந்தையை. | தந்தைகளை. |
| ௩. | தந்தையால்-யான்-யொடு-யோடு-யுடன். | தந்தைகளால். |
| ௪. | தந்தைக்கு. | தந்தைகளுக்கு. |
| ௫. | தந்தையில்-யின்-யிலிருந்து-யினின்று. | தந்தைகளில். |
| ௬. | தந்தையினது-யினுது-யின்-தந்தையினுடைய. | தந்தைகளினது. |
| எ. | தந்தையினிடத்தில்-தந்தையில்-யின்கண். | தந்தைகளிடத்தில். |
| அ. | தந்தையே. | தந்தைகளே. |

## 71. Declension of அது, இது, எது, யாது.

எக.—அது, இது, எது, யாது என்பவை எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இன் சாரியையும் அன் சாரியையும் பெறும். பன்மையிலே அற்றுச் சாரியையும் பெறும். து என்பது [illegible] யாகத் திரியும்.

உதாரணம்.

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| ௧. | அது. | அவை, அவைகள். |
| ௨. | அதனை. | அவற்றை, அவைகளை. |
| [illegible] | அதினால். | அவற்றால், அவைகளால். |

72. DECLENSION OF 1ST PERSONAL PRONOUN.

௭௨.—தன்மையிடமாகிய நான் என்பது எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இரண்டாவது முதலான வேற்றுமைகளில் நான் என்பது என் எனத் திரியும்.

பன்மையிலே முதல் வேற்றுமையில் நான் என்பது நாம் எனத் திரியும். இரண்டாம் வேற்றுமை முதலியவைகளிலும் எம் எனவும் நம் எனவும் திரியும்.

உதாரணம்.

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| ௧. | நான், யான். | நாம், நாங்கள், யாங்கள். |
| ௨. | என்னை. | நம்மை, எங்களை. |
| ௩. | என்னால். | நம்மால், எங்களால். |
| ௪. | என், எனது, என்னுடைய. | நம், நமது, நம்முடைய. எம், எங்கள், எங்களுடைய. |

## 73. Declension of 2nd Personal Pronoun.

௭௩.—நீ என்பது எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இரண்டாவது முதலிய வேற்றுமைகளில் முன்னிலை இடமாகிய நீ என்பது உன் எனத் திரியும்.

பன்மையிலே முதல் வேற்றுமையில் நீர் எனவும் நீம் என்வும் திரியும். இரண்டாம் வேற்றுமை முதலியவைகளில் உம் எனத் திரியும்.

உதாரணம்.

| வேற்றுமை. | ஒருமை. | பன்மை. |
|---|---|---|
| க. | நீ. | நீர், நீங்கள், நீவிர், நீயிர் |
| உ. | உன்னை, நின்னை. | உம்மை, உங்களை. |
| ௩. | உன்னால். | உம்மால், உங்களால். |
| ௪. | உன், உனது, உன்னுடைய. | உங்கள். |

செய்யுளில் நும்மை முதலியவும் வரும்.

## 74. Declension of the Reflexive Pronoun.

௭௪.—தான் என்பது எவ்வாறு வேற்றுமைப்படும்?

ஒருமையிலே இரண்டாவது முதலிய வேற்றுமைகளில் படர்க்கை இடமாகிய தான் என்பது தன் எனத் திரியும்.

பன்மையிலே முதல் வேற்றுமையில் தாம் எனத் திரியும். இரண்டு முதலிய வேற்றுமைகளில் தம் எனத் திரியும்.

உதாரணம்.

| வேற்றுமை. | ஒருமை. | [redacted]. |
|---|---|---|
| [redacted]. | தான். | தாம், தாங்கள். |
| ௨. | தன்னை. | தம்மை, தங்களை. |
| ௩. | தன்னால். | தம்மால், தங்களால். |

## II. VERBS.

## ௨. வினையியல்.

**75. Analysis of Verbal forms.**

௭௫.—வினைச்சொல்லில் எத்தனை பொருளை அறிய வேண்டும்?

வினைச்சொல்லில் பகுதி, விகுதி, மூவிடம், ஐம்பால், காலம், ஏவல், வியங்கோள், ஈரெச்சம், எதிர்மறை, தொழிற்பெயர். இப்பத்துப் பொருளையும் அறியவேண்டும்.

**76. Root.**

௭௬.—இவற்றுள் பகுதியாவதென்ன?

பகுக்கப்படாமல் சொல்லின் முதனிலையாய் நிற்பதே பகுதியாம்.

உ-ம். நட, படி, விடு, இரு, போ.

**77. Terminations.**

௭௭.—விகுதியாவதென்ன?

திணை பால் இடம் முதலியவை காண்பித்து,

சொல்லின் ஈற்றிலே நிற்கும் உருபே என்பதாம்.

| உ-ம். | | விகுதி. | பகுதியும், விகுதியும். |
|---|---|---|---|
| ஆண்பால். | | என், என். | வந்தேன், வந்தனென். |
| | | கு, டு, து, று, அல், அன். | |
| பெண்பால். | முன்னிலை. | ஆய், ஐ. | வந்தாய், வந்தி, வந்தை |
| பலர்பால். | தன்மை. | ஓம், அம். | வந்தோம், வந்தனம். |
| | | ஈர், ஈர்கள். | வந்தீர், வந்தீர்கள். |
| | | இர். | வந்திர், வந்தனிர். |
| | | மின். | நடமின். |
| ஆண்பால். | படர்க்கை | ஆன, அன். | வந்தான், வந்தனன். |
| பெண்பால். | படர்க்கை. | ஆள், அள். | வந்தாள், வந்தனள். |
| பலர்பால். | படர்க்கை. | ஆர்கள். | வந்தார், வந்தார்கள். |
| | | அர், ப. | வந்தனர், நடப்ப. |
| | | மார். | நடமார். |
| அஃறிணை. ஒன்றன்பால். | படர்க்கை. | து. | வந்தது. |
| அஃறிணை. பலவின்பால். | படர்க்கை. | அ, ஆ | வந்த, வந்தன, நடவா. |

இவ்விகுதிகளோடு வழங்குகிற வினைச்சொல் வினைமுற்று எனவும் முற்றுவினை எனவும்படும். அன் என்னுஞ் சாரியையும் வந்தது காண்க.

78. Tenses.

எஅ.—காலமாவது எத்தனை வகை ஆம்?

போனகாலம், நிகழ்காலம், வருங்காலம், என மூவகையாம். இவை பகுதி, விகுதி இரண்டிற்கும் நடுவே வரும் இடைநிலைகளால் குறிக்கப்படும்.

79. SIGNS OF THE PAST TENSE.

எகூ.—போனகாலத்து இடைநிலைகள் எவை?

த், த்த், ந்த், ட், ற், க், இன் ஆகிய இவ்ழும் போனகாலத்து இடைநிலைகள் ஆம்.

உதாரணம்.

| பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினைமுற்று. |
|---|---|---|---|
| செய் | த் | ஏன் | செய்தேன். |
| படி | த்த் | ஏன் | படித்தேன். |
| நட | ந்த் | ஓம் | நடந்தோம். |
| உண் | ட் | ஆய் | உண்டாய். |
| பெறு | ற் | அது | பெற்றது. |
| தொகு | க் | அது | தொக்கது. |
| அனுப்பு | இன் | ஈர் | அனுப்பினீர். |

சில வினைப்பகுதிகளோடு அளபெடையும் இன் சாரியையும் கூடிவரவும் போனகாலத்து வினைமுற்றாம்.

உ-ம். தழுவு—தழீஇனேன்.
வளை—வளைஇனேன்.

80. SIGNS OF THE PRESENT TENSE.

அ0.—நிகழ்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகள் எவை?

கிறு, க்கிறு, கின்று, க்கின்று, ஆநின்று ஆகிய இவ்வைந்தும் நிகழ்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகளாம்.

உதாரணம.

| பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினைமுற்று. |
| --- | --- | --- | --- |
| படி | கிறு | என் | படிகிறேன். |
| படி | க்கிறு | என் | படிக்கிறேன். |
| செய் | கின்று | ஓம் | செய்கின்றோம். |
| அழி | க்கின்று | ஆன் | அழிக்கின்றான். |
| நட | ஆநின்று | ஆய் | நடவாநின்றாய். |

## 81. SIGNS OF [illegible] FUTURE TENSE.

*அக.—வருங்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகள் எவை?*

வ், ப், ப்ப் இம்மூன்றும் வருங்காலத்தைக் குறிக்கும் இடைநிலைகளாம்.

உதாரணம்.

| பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினைமுற்று. |
| --- | --- | --- | --- |
| செய் | வ் | என் | செய்வேன். |
| உண் | ப் | ஓம் | உண்போம். |
| நட | ப்ப் | ஆய் | நடப்பாய். |

செய்துவில் கு என்னும் சாரியையும் வரும்.

உ—ம். செய்குவேன்.

## 82. Rules for the formation of the [redacted] tenses.

அ௨.—முக்காலங்களுக்கும் பொதுவான விதிகள் எவை?

(க) தன்வினைக்கும் பிறவினைக்கும் பொது வாய் நிற்கும் பல வினைப்பகுதிகள், நிகழ்காலத் திலே கிறு என்னும் இடைநிலையைப் பெறும் பொழுது தன்வினையாகவும், க்கிறு என்னும் இடைநிலையைப் பெறும்பொழுது பிறவினையா கவும் வழங்கும். அவற்றிற்கு முறையே போ னகாலத்தில் ந்த் என்னும் இடைநிலையும், த்த் என்னும் இடைநிலையும், வருங்காலத்தில் வ் என் னும் இடைநிலையும், ப்ப் என்னும் இடைநிலை யும் வரும்.

உதாரணம்.

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| அழி, { தன்வினை. | அழிகிறேன், | அழிந்தேன், | அழிவேன். |
| { பிறவினை. | அழிக்கிறேன், | அழித்தேன், | அழிப்பேன். |

கெடு, மேய், விரி முதலியவும் அவ்வாறெனக் காண்க.

(உ) தன்வினையாகி ங்கு, கு, ம்பு, சு, டு ஈற் றிலுள்ள பகுதிகளும், பிறவினையாகி க்கு, ப்பு, ச்சு, ட்டு ஈற்றிலுள்ள பகுதிகளும், பெரும்பா லும் நிகழ்காலத்திலே கிறு என்னும் இடைநிலை யையும், போனகாலத்திலே இன் என்னும்

இடைநிலையையும், வருங்காலத் ல வ் என் னும் இடைநிலையையும் பெறும்.

உதாரணம்.

| | பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|---|
| தன்வினை. | அடங்கு, | அடங்குகிறேன், | அபங்கினேன், | அடங்குவேன். |
| பிறவினை. | அடக்கு, | அடக்குகிறேன், | அடக்கினேன், | அடக்குவேன். |
| | பேசு, | பேசுகிறேன், | பேசினேன், | பேசுவேன். |
| பிறவினை. | பாய்ச்சு, | பாய்ச்சுகிறேன், | பாய்ச்சினேன், | பாய்ச்சுவேன். |

(௩) அகரவீற்றுப் பகுதிகள் நிகழ்காலத்தி லே க்கிறு என்றும், போனகாலத்திலே ந்த் என் றும், வருங்காலத்திலே ப்ப் என்றும் இடைநிலை களைப் பெறும்.

உதாரணம்.

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| நட, | நடக்கிறேன், | நடந்தேன், | நடப்பேன் |
| பற, | பறக்கிறேன், | பறந்தேன், | பறப்பேன் |

(௪) ண், ளு ஈறுள்ள பகுதிகள் முக்காலத்தி லும் முறையே கிறு, ட், வ் ஆவது, ப் ஆவது இடைநிலைகளாகப் பெறும்.

உதாரணம்.

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| | | உண்டேன், | உண்பேன் |
| | | | ஆளுவேன். |

(௫) ன், லு ஈறுள்ள பகுதிகள் முக்காலத்திலும் முறையே, கிறு, ற், வ் ஆவது, ப் ஆவது இடைநிலைகளாகப் பெறும்.

உதாரணம்.

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| தின், | தின்கிறேன், | தின்றேன், | தின்பேன். |
| செல்லு, | செல்லுகிறேன், | சென்றேன், | செல்லுவேன். |

(௬) தனிக்குறிலை அணைந்த டு, று, கு ஈறுள்ள பகுதிகள் நிகழ்காலத்திலே கிறு என்னும் இடைநிலையையும், போனகாலத்திலே ஒற்றின் மிகுதலையும், வருங்காலத்திலே வ் என்னும் இடைநிலையையும் பெறும்.

உதாரணம்.

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| படு, | படுகிறேன், | பட்டேன், | படுவேன். |
| பெறு, | பெறுகிறேன், | பெற்றேன், | பெறுவேன். |
| தகு, | தகுகிறேன், | தக்கேன், | தகுவேன். |

(௭) சில பகுதிகள் அவ்வவற்றிற்குரிய சில விகாரங்களைப் பெறும்.

உதாரணம.

| பகுதி. | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|
| (க) வா, | வரு-கிறேன், | வந்தேன், | வருவேன். |
| தா, | தரு-கிறேன், | தந்தேன், | தருவேன். |
| (உ) ஏல், | ஏற்-கிறேன், | ஏற்றேன், | ஏற்பேன். |
| கேள், | கேட்-கிறேன், | கேட்டேன், | கேட்பேன். |
| (௩) இரு, | இருக்-கிறேன், | இருந்தேன், | இருப்பேன். |
| (௪) விள்ளு, | விள்ளு-கிறேன், | விண்டேன், | விள்ளுவேன். |
| ஈனு, | ஈனு-கிறேன், | ஈன்றேன், | ஈனுவேன். |
| போடு, | போடு-கிறேன், | போட்டேன், | போடுவேன். |
| கொள்ளு, | கொள்ளு-கிறேன், | கொண்டேன், | கொள்ளுவேன். |
| (௫) காண், | காண்-கிறேன், | கண்டேன், | காண்பேன். |
| வாழு, | வாழு-கிறேன், | வாழ்ந்தேன், | வாழுவேன். |
| (௬) பெய், | | | |
| செய், | | | |
| நெய், | | | |
| வை, | கிறேன், | தேன, | வேன். |
| பொரு, | | | |
| அழு, | | | |
| உழு, | | | |
| தொழு, | | | |
| (௭) விழு, | கிறேன், | விழுந்தேன்,<br>வீழ்ந்தேன், | விழுவேன். |
| (௮) ஆகு, | ஆகுகிறேன்,<br>ஆகிறேன், | ஆனேன், ஆகினேன்,<br>ஆயினேன், | ஆவேன்.<br>ஆகுவேன். |
| போ, | போகிறேன்,<br>போகுகிறேன், | போனேன், போகினேன், போயினேன், | போவேன்.<br>போகுவேன். |
| (௯) சா, | சாகிறேன், | செத்தேன், | சாவேன்.<br>சாகுவேன். |
| (௰) வே, | வேகிறேன், | வெந்தேன், | வேகுவேன்.<br>வேவேன். |
| சோ, | சோகிறேன், | சொந்தேன், | சோகுவேன்.<br>சோவேன். |

## 83. Paradigm of the Verbs.

௮௩.—இம்மூன்று காலங்களும் விகுதிகளோடே வழங்குகிற அட்டவணையைச் சொல்லு.

| | | | நிகழ்காலம். | போனகாலம். | வருங்காலம். |
|---|---|---|---|---|---|
| ஒரு[redacted] | தன்[redacted] | | படிக்கிறேன்,<br>செய்கிறேன்,<br>படிக்கின்றனென்,<br>நடவாநின்றேன், | படித்தேன்,<br>செய்தேன்,<br>நடந்தனென்,<br>உண்டு,<br>வந்து, | படிப்பேன்.<br>செய்வேன்.<br>நடப்பனென்.<br>நடப்பல், உண்கு.<br>காண்பன்.<br>வாழ்து, சென்று. |
| | முன்னிலை | | படிக்கிறாய்,<br>செய்கின்றாய்,<br>நடவாநின்றாய், | படித்தாய்,<br>நடந்தனை,<br>நடந்தி, | படிப்பாய். |
| | படர்க்கை. | ஆ-ல். | படிக்கிறான்,<br>படிக்கின்றனன், | படித்தான்,<br>படித்தனன், | படிப்பான். |
| | | பெ-ல். | படிக்கிறாள்,<br>படிக்கின்றனள், | படித்தாள்,<br>படித்தனள், | படிப்பாள். |
| | | ஒ-ல். | படிக்கிறது, | படித்தது,<br>சொல்லினது,<br>சொல்லிற்று, | படிக்கும். |
| பன்மை. | தன்மை. | | படிக்கிறோம், | படித்தோம்,<br>நடந்தாம்,<br>நடந்தனம்,<br>நடந்தோம்,<br>நடந்தனெம், உண்டும், வந்தும், | படிப்போம்.<br>வாழ்தும்.<br>செய்கும்.<br>சேறும். |
| | முன்னிலை. | | படிக்கிறீர்கள்,<br>படிக்கிறீர், | நடந்தீர்கள்,<br>நடந்தீர்,<br>நடந்திர், | படிப்பீர்கள்.<br>படிப்பீர். |
| | பட[redacted] | பலர்பால். | படிக்கிறார்கள்,<br>படிக்கிறார்,<br>படிக்கின்றனர், | படித்தார்கள்,<br>படித்தார்,<br>நடந்தனர், | படிப்பார்கள்.<br>படிப்பார்.<br>நடப்பர்.<br>என்ப, என்மர்.<br>என்மனார். |
| | | பலவின்பால். | படிக்கின்றன, | படித்தன,<br>நடந்தன,<br>நடந்த, | படிக்கும்.<br>நடப்பன. |

## 84. Imperative.

*அச.—ஏவலாவது என்ன?*

ஏவலாவது கட்டளைப் பொருளுள்ள வினை ஆகி முன்னிலையிடத்தையே பெறும். வினைப் பகுதியே வழக்கமாய் ஒருமை ஏவலாம். உம் அல்லது உங்கள் புணர்ந்தால் பன்மை ஏவலாம். செய்யுளிலே பல விகுதிகளையும் பெறும்.

உ—ம். படி, படியும், படியுங்கள்.

உண்மோ, கேட்டி, ஒருமையிலும்; உண்மின், உண்மினோ, உண்மினீர் பன்மையிலும் வரும்.

## 85. The Optative.

*அரு—வியங்கோள் ஆவதென்ன?*

வியங்கோளானது இருதிணை ஐம்பால் மூவிடங்களுக்கும் உரித்தாய் மரியாதை ஏவல் பொருளும், விருப்பப் பொருளுமுள்ள வினையாம். இதற்கு விகுதிகள் க, இய, இயர், அல், ஆக என்பனவையாம்.

உதாரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| ஒருமை | நான், | வாழ்க, | வாழ்வேனாக, | செய்யக்கடவேன். |
| | நீ, | வாழிய, | வாழ்வாயாக, | செய்யக்கடவாய். |
| | அவன், | வாழியர், | வாழ்வானாக, | செய்யக்கடவான். |
| | அவள், | கொள்ளல். | வாழ்வாளாக, | செய்யக்கடவாள். |
| | அது, | | வாழ்வதாக, | செய்யக்கடவது. |
| பன்மை. | நாம், | வாழ்க, | வாழ்வோமாக, | செய்யக்கடவோம். |
| | நீர், | வாழிய, | வாழ்வீராக, | செய்யக்கடவீர். |
| | நீங்கள், | வாழியர், | வாழ்வீர்களாக, | செய்யக்கடவீர்கள். |
| | அவர்கள், | கொள்ளல், | வாழ்வார்களாக, | செய்யக்கடவர்கள். |
| | அவை, | | வாழ்வனவாக, | செய்யக்கடவன. |

86. DEPENDENT VERBAL FORMS.

*அசு.—வினையெச்சம் என்பன எவை?*

மூக்காலத்து வினைமுற்றுக்களைக் கொண்டு முடிவது வினையெச்சமாம். வினையெச்சங்கள் மூன்றும். அவற்றுள்:

(க) வினைப்பகுதியோடு போனகாலத்து இடைநிலையும் உகர விகுதியும் வரவும், இன் என்னும் இடைநிலையின் ஈற்றிலுள்ள ன் கெட்வும் போனகாலத்து வினையெச்சமாம்.

உதாரணம்.

| பகுதி. | இடைநிலை. | விகுதி. | வினையெச்சம். |
|---|---|---|---|
| படி | த்த் | உ | படித்து. |
| அனுப்பு | இன் | ணகரங்கெட | அனுப்பி. |

செய்யுளிலே செய்பு செயீயா என்பவற்றைப்போல்வனவும் வரும். ஆகி என்பது ஆய் எனவும் போகி என்பது போய் எனவும் வரும்.

(உ) பகுதியோடு போனகாலத்து இடைநிலையும், ஆல் என்னும் விகுதியும் வரவும், பகுதியானது க்க் என்னும் இடைநிலை வந்தும் வாராதும் இல் என்னும் விகுதி பெறவும் வருங்காலத்து வினையெச்சமாம்.

உதாரணம்.

| பகுதி. | இடைநிலை. | விகுதி. | வருங்காலத்து வினையெச்சம். |
|---|---|---|---|
| செய் | த் | ஆல், இல், | செய்தால், செய்யில். |
| படி | த்த் | ஆல், இல், | படித்தால், படிக்கில். |
| அனுப்பு | இன் | ஆல், | அனுப்பினல். |

(௩) க்கிறு என்னும் நிகழ்காலத்து இடைநிலையைப் பெற்ற வினைப்பகுதியோடு க்க என்னும் விகுதியையும் கிறு என்னும் நிகழ்காலத்து இடைநிலையைப் பெற்ற வினைப்பகுதியோடு அ என்னும் விகுதியையும் சேர்த்தால் முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சமாம்.

உதாரணம.

| பகுதி. | விகுதி. | முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சம். |
|---|---|---|
| படி | | படிக்க. |
| அனுப்பு | க்க அ | அனுப்ப. |

செய்யுளில் செய்க, செய்குப, நடப்ப எனவும் இவை போல்வனவும் வரும்.

87. Relative Verbal Forms.

அஎ.—பெயரெச்சம் என்பன எவை?

பெயர்ச்சொல்லைக் கொண்டு முடியும் எச்சம் பெயரெச்சமாம். பெயரெச்சங்கள் மூவகையாம். இவற்றுள்:

(க) வினைப்பகுதியானது போனகாலத்து இடைநிலையோடு அகர விகுதியையும் பெற்றால் போனகாலத்துப் பெயரெச்சமாம்.

உதாரணம்.

| பகுதி. | இடைநிலை. | | போனகாலத்துப் பெயரெச்சம். |
|---|---|---|---|
| படி | | | படித்த. |
| செய் | த் | அ | செய்த. |
| அனுப்பு | | அ | அனுப்பின. |

நடத்திய தழீஇய என்பவைபோல்வனவும் வரும்.
ஆகின என்பது ஆயின, ஆன, ஆகிய எனவும் வரும்.
போகின, போயின, போன என்றும் வரும்.

(உ) வினைப்பகுதியானது நிகழ்காலத்து இடைநிலையோடு அகர விகுதியையும் பெற்றால் நிகழ்காலத்துப் பெயரெச்சமாம்.

உதாரணம்.

| பகுதி. | இடை நிலை. | விகுதி. | நிகழ்காலத்துப் பெயரெச்சம். |
|---|---|---|---|
| படி | க்கிறு | அ | படிக்கிற. |
| செய் | கிறு | அ | செய்கிற. |

(௩) வருங்காலத்து அஃறிணைப்படர்க்கை வினைமுற்று வருங்காலத்துப் பெயரெச்சமாகவும் வழங்கப்படும்.

உ—ம். படிக்கும்.

செய்யும்.

ஆகும் என்பது ஆம் எனவும், போகும் என்பது போம் எனவும், உலாவும் என்பது உலாம் எனவும் வரும்.

88. NEGATIVE VERBS.

அஅ.—எதிர்மறை ஆவதென்ன?

வினையின் தொழிலை மறுக்கிற வினைச்சொல் எதிர்மறை என்னப்படும்.

89. FINITE NEGATIVE VERB.

அகூ.—எதிர்மறை வினைமுற்று எவ்வாறு வரும்?

வினைப்பகுதியும், விகுதியும் இடைநிலையின்றிப் புணர்வது எதிர்மறை வினைமுற்றாம். இது மூக்காலத்துக்கும் பொதுவாம்.

உதாரணம்.

| பகுதி. | | விகுதி. | | முக்காலத்துக்கும் பொதுவான எதிர்மறை. |
|---|---|---|---|---|
| படி | ஒரு[redacted]ம. | ஏன், | ஒருமை. | படியேன். |
| | | ஆய், | | படியாய். |
| | | ஆன், | | படியான். |
| | | ஆள், | | படியாள். |
| | | ஆது, | | படியாது. |
| | | ஆ, | | படியா. |
| படி | பன[redacted]ம. | ஓம், ஏம், | பன்மை. | படியோம், படியேம். |
| | | இர், | | படியீர். |
| | | இர்கள், | | படியீர்கள். |
| | | ஆர், | | படியார். |
| | | ஆர்கள் | | படியார்கள். |
| | | ஆ, | | படியா. |

## 90. Negative Dependent Verbal Forms.

கூ0.—எதிர்மறை வினையெச்சம் எவ்வாறாம்?

வினைப்பகுதியோடு ஆமல் ஆது என்னும விகுதிகளைச் சேர்த்தால் எதிர்மறை வினையெச்சமாம்.

உதாரணம்.

| பகுதி. | விகுதி. | எதிர்மறை வினையெச்சம். |
| --- | --- | --- |
| படி | ஆமல் | படியாமல், படியாது |
| அனுப்பு | ஆது | அனுப்பாமல், அனுப்பாது. |

இவற்றோடு இரு என்னும துணைவினையைச சேர்ப்பதும் உண்டு.

உ—ம். படியாமல் இருக்கிறேன், அனுப்பாதிருந்தான், செய்யாமல் இருப்பார்கள்.

## 91. Negative, Relative, and Verbal Forms.

கக.—எதிர்மறைப் பெயரெச்சம் எவ்வாறு வரும்?

வினைப்பகுதியோடு ஆத, ஆ என்னும் விகுதிகள் சேர்ந்தால், எதிர்மறைப் பெயரெச்சமாம்.

உதாரணம்.

| பகுதி. | விகுதி. | எதிர்மறைப் பெயரெச்சம. |
| --- | --- | --- |
| படி | ஆத, [redacted] | படியாத, படியா. |

92. Negative Imperative.

௯௨.—எதிர்மறை ஏவல் எவ்வாறு வரும்?

**வினைப்பகுதியோடே ஏல், அல் என்னும் விகுதிகள் சேர்ந்தால், எதிர்மறை ஒருமை ஏவலாம். அன்மின் என்னும் விகுதி சேர்ந்தால் அதின் பன்மையாம்.**

உதாரணம்.

| பகுதி. | விகுதி. | | எதிர்மறை ஏவல். |
| --- | --- | --- | --- |
| படி | ஏல், அல் | ஒருமை. | படியேல், படியல். |
| | அன்மின் | பன்மை. | பட |

செய்யுளிலே செய்யற்க எனவும் வரும்.
வழக்கத்திலே படியாதே, படியாதேயும், படியாதேயுங்கள், படியாதிரு, படியாதிரும், படியாதிருங்கள் எனவும் வரும்.

93. Conjugated Noun.

**பெயராகி வினையாகவும் வழங்கிய சொற்களாம்.**

உ—ம். முதற்று முதல என்பவை முதல் என்னும் பெயரால் உண்டான வினைக்குறிப்புகளாம்.

**இவை வேற்றுமை உருபுகளையும் மூவிடத்**

துக்கும் ஐம்பாலுக்குமுரிய விகுதிகளையும் பெறும்.

உதாரணம்.

| | | ஆண்பால். | பெண்பால். | ஒன்றன்பால். | பலர்பால். | பலவின்பால். |
|---|---|---|---|---|---|---|
| (க) தன்மை | க. | நல்லேன், | | | நல்லேம். | |
| | உ. | நல்லேனை, | | | நல்லேமை. | |
| | ௩. | நல்லேனால் முதல், | | | நல்லேமால் முதல். | |
| (உ) முன்னிலை. | க. | நல்லாய், நல்லோய், | | | நல்லீர். | |
| | உ. | நல்லாயை, | | | நல்லீரை. | |
| | ௩. | நல்லாயால் முதல். | | | நல்லீரால் முதல். | |
| | க. | நல்லன், நல்லான், நல்லோன், | நல்லள், நல்லாள், | நல்லது, | நல்லவர், நல்லார், நல்லவர்கள், நல்லோர். | நல்லவை. |
| | உ. | நல்லனை, | நல்லளை, | நல்[illegible] | நல்லாரை. | நல்லவற்றை. |
| | ௩. | நல்லனால் முதல். | நல்லளால் முதல். | நல்லதால் | ல்லாரால் முதல். | ல்லவற்றால் முதல். |

94. VERBAL NOUNS.

௯௪.—தொழிற்பெயர் என்பன எவை?

கிறு என்னும் இடைநிலையைப் பெறும் பகுதிகளோடு அல், தல், கை, வு என்னும் விகுதிகளையும் க்கிறு என்னும் இடைநிலையைப் பெறும் பகுதிகளோடு த்தல், *க்குதல், க்கை, ப்பு முதலிய விகுதிகளையும் கூட்டினால் தொழிற் பெயர்களாம்.

உதாரணம்.

| பகுதி. | விகுதி. | தொழிற்பெயர். |
|---|---|---|
| படி | த்தல், ப்பு, | படித்தல், படிப்பு. |
| | க்குதல், க்கை, | படிக்குதல், படிக்கை. |
| அறி | தல், அல், | அறிதல், அறியல். |
| | வு | |
| செய் | அல் | செய்யல். |
| | கை | செய்கை. |

மை என்னும் விகுதி வினைப்பகுதியோடும் போனகால நிகழ்கால இடைநிலைகளோடும் எதிர்மறை ஆகார விகுதியோடும் புணர தொழிற்பெயர்களாம்.

உ—ம். தாழ்................ தாழ்மை.
படிக்கின்று ...... படிக்கின்றமை.
படித்த ............ படித்தமை.
படியா ............ படியாமை.

95. Participial Nouns.

கரு.—பெயரெச்சத்தால் உண்டாகும் வினைப்பெயர்கள் எவை?

போனகால நிகழ்காலத்துப் பெயரெச்சங்களோடும் ஐம்பாலுக்குரிய விகுதிகளைக் கூட்டினால் அந்தந்தக் காலத்துக்கும் பாலுக்கும் உரித்தான பெயர்ச்சொற்கள் உண்டாகும். பகுதியோடு ப்பு, ப என்னும் இடைநிலைகளையும் ஐம்பாலுக்குரிய விகுதிகளையும் கூட்டினால் வருங்காலத்து வினைப்பெயர்கள் உண்டாம்.

உதாரணம்.

| பெயரெச்சம். | வினைப்பெயர்கள். | | | | |
|---|---|---|---|---|---|
| படிக்கிற, | படிக்கிறவன், | படிக்கிறவள், | றவர்கள், | றது, | றவை. |
| படித்த, | படித்தவன், | படித்தவள், | த்தவர்கள், | த்தது, | த்தவை. |
| படிப்ப, | படிப்பவன், | படிப்பவள், | ப்பவர்கள், | ப்பது, | ப்பவை. |
| செய்ப, | செய்பவன், | செய்பவள், | பவர்கள், | வது, | பவை. |

96. OTHER VERBAL NOUNS.

௬௬.—வினைப்பகுதிகளினாலே வருகிற வேறே பெயர்கள் உண்டோ?

வினைப்பகுதிகள் விகுதியின்றியும், வி, ஐ, கை முதலிய விகுதிகளைப் பெற்றும் பெயர்களாக வழங்குவதும் உண்டு.

உதாரணம்.

| பகுதி. | விகுதி. | பொருட்சொல். |
|---|---|---|
| பற, | ஐ .......... | பறவை. |
| வகு, | ஐ, ப்பு ....... | வகை, வகுப்பு. |
| கல், | வி .......... | கல்வி. |
| ஒழுக்கு, | அம் ... ... | ஒழுக்கம். |
| உடு, | ஐ, க்கை, ப்பு, | உடை, உடுக்கை, உடுப்பு. |
| அறை, | ... .... .... | அறை. |
| கெடு, | விகாரம் ...... | கேடு. |
| பெறு, | .... .... ... | பேறு. |
| விடு, | .... ... .... | விடுதி, வீடு. |
| ஓடு, | அம் .......... | ஓட்டம். |
| ஊர், | இ .......... | ஊரி. |
| ஓர், | ச்சி .......... | ஓர்ச்சி. |
| தின், | .... .... .... | தீன். |

97. Kinds of Verbs.

*கஎ.—மேற்காட்டிய வினைச்சொல் எத்தனை வகையாம்?*

தெரிநிலைவினைகள் என்றும், குறிப்புநிலை வினைகள் என்றும் இருவகையாம்.

98. Verbs indicating difference of time.

*கஅ.—தெரிநிலைவினை ஆவதெது?*

குறிப்புவினையன்றி காலந்தெரிகின்ற வினைகள் யாவும் தெரிநிலைவினைகளாம்.

99. Classes of Verbs.

*கக.—அத்தெரிநிலைவினைகள் எவ்வாறு வகுக்கப்படும்?*

செயப்படுபொருள் குன்றிய வினைகளும், செயப்படுபொருள் குன்றாத வினைகளும்; தன்வினை, பிறவினைகளும்; செய்வினை, செயப்பாட்டு வினைகளும்; விதிவினை, மறைவினைகளுமாக வகுக்கப்படும்.

100. Intransitive Verbs.

*க00.—செயப்படுபொருள் குன்றிய வினைகள் எவை?*

செயப்படுபொருளை உணர்த்திய் இரண்டாம் வேற்றுமையை வேண்டாத வினை செயப்படுபொருள் குன்றிய வினை என்னப்படும்.

உ—ம். நடந்தான்; இதை நடந்தான் என வராது.

101. Transitive Verbs.

*க0க.—செயப்படுபொருள் குன்றாத வினைகள்*

செயப்படுபொருளை உணர்த்திய இரண்டாம் வேற்றுமையை வேண்டிவரும் வினை செயப்படுபொருள் குன்றாத வினையாம்.

உ—ம். கொன்றான்; மிருகத்தைக் கொன்றான் என வரும்.

102. VERBS DENOTING ACTION, TRANSITIVE OR INTRANSITIVE.

*௧௦௨.—தன்வினை ஆவதென்ன?*

தன் கருத்தாவாகிய எழுவாயின் செய்கையைக் காட்டுவது தன்வினையாம்.

உ—ம். நடந்தான், அளித்தான்.

103. VERBS CAUSAL.

*௧௦௩.—பிறவினை ஆவதென்ன?*

தன் எழுவாய் அல்லாத பிற கர்த்தாவின் செய்கையைக் காட்டுவது பிறவினையாம். அது வி, ப்பி, த்து, ச்சு என்னும் விகுதிகளில் ஒன்றேனும் இரண்டேனும் பெற்றுவரும். சிலவேளை மெல்லெழுத்து வல்லெழுத்தாகத் திரியவும், வல்லெழுத்து இரட்டிக்கவும் வரும்.

உதாரணம்.

| | |
|---|---|
| நடப்பிக்கிறான், செய்விக்கிறான், நடத்துகிறான், பாய்ச்சுகிறான், | என ப்பி, வி, த்து, ச்சு என்னும் விகுதிகள் வந்தது காண்க. |
| எழுப்புகிறான், அடக்குகிறான், | [illegible] எழும்பு, அடங்கு என்னும் வினைப் பகுதிகளில் மகரம் பகரமாகவும், ஙகரம் ககரமாகவும் விகாரப்பட்டது காண்க. |
| உருக்குகிறது, அழிக்கிறது, | என உருகுகிறது, அழிகிறது என்னும் வினைகளில் ககரம் இரட்டித்தது. |

104. Active Verbs.

க0ௌ.—செய்வினை ஆவதென்ன?

செய்கையைக் காட்டுவது செய்வினையாம்.

உ—ம். கொற்றன் கட்டினான்.

105. Passive Verbs.

க0ரு.—செயப்பாட்டு வினை ஆவதென்ன?

செயப்படுபொருள் குன்றாத வினைகளின் மூக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சத்தோடு படு என்னும் வினைப்பகுதியைச் சேர்த்தால், செயப்பாட்டு வினையாகி, மூன்றும் வேற்றுமைக் கர்த்தாவைக் கொண்டுவரும்.

உ—ம். நடப்பிக்கப்படுகிறான், இவ்வீடு கொற்றனால் கட்டப்பட்டது, உண்ணப்படுகிறது.

உண் என்னும் பகுதி சில பகுதிகளோடே சேர்ந்து செயப்பாட்டு வினையாம்.

உ—ம். அடியுண்டான்.
தள்ளுண்டான்.

106. Affirmative and Negative Verbs.

க0௬.—விதிவினை மறைவினை என்பவை எவை?

வினையின் செய்கையை உண்டென்று நிச்சயிக்கிற வினை விதிவினை எனவும் உடன்பாட்டு வினை எனவும் படும். அச்செய்கையை மறுக்கிற வினை மறைவினை என்னப்படும்.

உ—ம். நடந்தேன் என்பது, விதிவினையாம்.
நடவேன் என்பது, மறைவினையாம்.

## III. PARTICLES.

## ௩. இடைச்சொல்லியல்.

107. CLASSES OF PARTICLES.

*கoஎ.—இடைச்சொற்கள் எத்தனை வகையாம்?*

(க) வேற்றுமை உருபுகளும், (உ) விகுதி உருபுகளும், (௩) இடைநிலை உருபுகளும், (௪) சாரியைகளும், (௫) உவமைச் சொற்களும், (௬) தத்தம்பொருளை உணர்த்திய சொற்களும், (எ) இசை நிறைக்கிற சொற்களும், (அ) அசை நிறைக்கிற சொற்களும், ஆக இடைச்சொற்கள் எட்டுவகையாம்.

108. INCREMENTS.

*கoஅ.—சாரியைகள் எத்தனை?*

அன், ஆன், இன், அல், அற்று, இற்று, அத்து, அம், தம், நம், நும், ஏ, அ, உ, ஐ, கு, ன் இப் பதினேழும் சாரியைகளாம்.

உ—ம். மூன்று + கால் = மூன்றே கால் என்பதில், ஏ சாரியை வந்தது.
மனிதன் + கு = மனிதனுக்கு என்பதில், உ சாரியை வந்தது.
மற்றவையும் இவ்வாறே.

109. WORDS OF COMPARISON.

*கoக.—உவமைச்சொற்கள் எவை?*

போல, ஒப்ப, மான, நேர, நிகர, படி, புரை, உறழ முதலியவும் உவமைச் சொற்களாம்.

உ—ம். இதைப்போல, அதற்கொப்ப.

110. Particles of various meanings.

௧௧௦.—தத்தம்பொருளை உணர்த்திய இடைச்சொற்கள் எவை?

ஏ, ஓ, ஆ, உம், என, என்று, என்பவன், என்பது, ஆனவன், ஆனது, ஆவது, முன், பின், கீழ், மேல், என்றா, எனா, அந்தோ முதலியவும், தத்தம்பொருளைக் காட்டிய இடைச்சொற்களாம்.

111. Uses of ஏ.

௧௧௧.—ஏகாரம் எத்தனை பொருளைத் தரும்?

ஏ, அறுவகைப் பொருளையும் தரும். அவை யாவன:

(௧) தேற்றம். உ—ம். சன்மார்க்கருக்கே புகழ்.
(௨) எண். உ—ம். நிலமே, சலமே, தீயே, வளியே.
(௩) வினா. உ—ம். நீயே தந்தாய்.
(௪) பிரித்தல். உ—ம். அவனே தந்தான்.
(௫) ஈற்றசை. உ—ம். பகர்ந்தனனே.
(௬) இசைநிறை. உ—ம். ஏயே இவள் ஒருத்தி.

112. Uses of ஓ.

௧௧௨.—ஓகாரம் எத்தனை பொருளைக் காட்டும்?

ஓ எட்டுப்பொருளையும் காட்டும். அவை யாவன:

(௪) பிரித்தல். உ—ம். அவனோ செய்தான்.
(௫) ஒழியிசை. உ—ம். வேலைசெய்யவோ போகி றாய்.
(௬) எதிர்மறை. உ—ம். நானோ சொன்னேன்.
(௭) வினா. உ—ம். அவனோ.
(௮) தெளிவு. உ—ம். நன்றோவன்று, தீதோவ ன்று.
(௯) கழிதல். உ—ம். நைதலின்றி நல்லறம்செய் தாலோ உயிர் உய்யும்.
(எ) சிறப்பு. உ—ம். ஓ ஓ பெரியவன்!
(அ) அசைநிலை. உ—ம். ஓ ஓ உவமன்.

113. Uses of உம்.

ககங.—உம் என்பது எத்தனை பொருளைக் காட் டும்?

உம் என்பது எட்டுப்பொருளையும் காட்டும். அவையாவன:

(க) எதிர்மறை. உ—ம். வருதலும் தீது.
(உ) எச்சம். உ—ம். சாத்தனும் வந்தான்.
(௩) முற்று. உ—ம். தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்கள்.
(௪) எண். உ—ம். பொன்னும், வெள்ளியும், ஈயமும்.
(௫) சிறப்பு. உ—ம். குறவருமருளும் குன்றம்.
(௬) ஐயம். உ—ம். பத்தானும், எட்டானு னும்.
(எ) ஆக்கம். உ—ம். பாலே மருந்துமாயிற்று.
(அ) தெளிவு. உ—ம். ஆணுமன்று, பெண்ணும ன்று.

114. SIGNS [redacted] QUOTATION, என, என்று.

*ககச.—என, என்று இவ்விரண்டும் எத்தனை பொருளைத் தரும்?*

**என, என்று எழுபொருளையும் தரும். அவை யாவன:**

(க) உவமை. உ—ம். கொடும்புலி பாய்ந்தெனப் பாய்ந்தான்.
(உ) எண். உ—ம். ஒன்றென, இரண்டென இவ்விரண்டும் இவ்வாறு வழங்கும்.
(ங) குணம். உ—ம். வெள்ளென விளங்கிற்று.
(ச) வினை. உ—ம். கொள்ளெனக் கொண்டான்.
பெயர். உ—ம். உறையூர் என்று சொல்லப்படு

(சு) இசை. உ—ம். ஒல்லென ஒலித்தது.
(எ) குறிப்பு. உ—ம். பொள்ளென வந்தான்.

115. EUPHONIC PARTICLES.

*ககரு.—இசைநிறை ஆவதென்ன?*

**அர்த்தமின்றி ஓசை நிறைப்பதற்குமாத்திரம் வரும் இடைச்சொல் இசைநிறை என்பதாம்.**

உ—ம். சொல்லேன்றெய்ய என்பதில் தெய்ய என்பது வெறும் இசைநிறையாம்.

116. REDUNDANT PARTICLES.

*ககசு.—அசைநிலை ஆவதென்ன?*

**அர்த்தமின்றி அசை நிறைப்பதற்குமாத்திரம் வரும் இடைச்சொல் அசைநிலையாம்.**

உ-ம். கற்றதனாலாய பயனென்கொல் என்பதில், கொல் என்பது வெறும் அசைநிலையாம்.

117. Various Interjections.

*கஎ.—இரக்க இடைச்சொற்களும், அச்ச இடைச்சொற்களும், இகழ்ச்சி இடைச்சொற்களும், அதிசய இடைச்சொற்களும் எவை?*

ஆஅ, ஓஒ, அந்தோ, ஐயோ, அன்னோ, அச்சோ முதலியவை இரக்கத்தையும்; கூ, கூகூ, ஐயோ, ஐயையோ முதலியவை அச்சத்தையும்; ஏஎ, சீ முதலியவை இகழ்ச்சியையும்; ஓகோ, ஓஒ, ஆகா, அம்மா முதலியவை அதிசயத்தையும் காட்டுகிற இடைச்சொற்களாம்.

## IV. QUALIFYING WORDS, ADJECTIVES AND ADVERBS.

## ச. உரிச்சொல்லியல்.

---

118. Kinds of qualifying words.

*கஅ.—உரிச்சொல் எத்தனை வகையாம்?*

பெயருரிச்சொல் என்றும், வினையுரிச்சொல் என்றும் இருவகையாம்.

119. Adjectives.

*ககக.—பெயருரிச்சொல் எவ்வாறாம்?*

(க) சிலவிடத்து பெயரானது உரிச்சொல்லாக வரும்.

உ-ம். பொற்சிலை என்பதில், பொன் என்னும் பெயர்ச்சொல்லானது குணத்தைக் காட்டிய உரிச்சொல்லாக வந்தது.

**(உ) சிலவிடத்து உள்ள, ஆன என்னும் பெயரெச்சங்கள் புணர்வதினால் பெயர்ச்சொல் உரிச்சொல்லாக நிற்கும்.**

உ-ம். அறிவுள்ள மனிதன், செம்மையான பாதை.

**(ங) சில பெயர்கள் ஈறு கெட்டும் திரிந்தும் உரிச்சொல் ஆகும்.**

உ-ம். மரம், மரக்கொம்பு. ஆடு, ஆட்டுக்கால். எருது, எருத்துமாடு. இவை ஆறும் வேற்றுமையின் தொகை என்று சொல்வதும் தகும்.

**(ச) சில சொற்கள் இயல்பாய் உரிச்சொல்லாம்.**

உ-ம். பல, நல, சில, புது.

120. Adverbs.

கஉ0.—வினையுரிச்சொல் எவ்வாறாம்?

**(க) சில வினையெச்சங்கள் வினையுரிச்சொல்லாக வழங்கும்.**

உ-ம். சாலப் பேசினான், நனி வருந்தினான்.

**(உ) சில பெயர்ச்சொல்லோடே ஆய் என்னும் வினையெச்சம் புணர்வதினால் வினையுரிச்சொல் ஆகும்.**

உ-ம். சந்தோஷமாய்ப் பேசினான்.

(ங) சில வினையின் பகு[illegible]வினையுரிச் சொல்லாக வழங்கும்.

உ—ம். கழி=மிகவும்.

121. Some peculiar formations.

கஉக.—சிறு, பெரு, குறு, கரு முதலிய உரிச் சொற்கள் எவ்வாறு வழங்கும்?

(க) சிலவிடத்து, விகாரமின்றி வழங்கப்படும்.

உ—ம். சிறுகலம்.

(உ) சிலவிடத்து, ஒற்று இரட்டிக்கும்.

உ—ம். சிறு + இன்பம் = சிற்றின்பம்.
குறு + இயல் = குற்றியல்.
பசு + அரிசி = பச்சரிசி.

(ங) சிலவிடத்து, குறில் நெடிலாகும்.

உ—ம். பெரு + இன்பம் = பேரின்பம்.
கரு + மேகம் = கார்மேகம்.

(ச) சிலவிடத்து, மகரம் தோன்றும்.

உ—ம். அரு + பொருள் = அரும்பொருள்.

(ரு) சிலவிடத்து, ஈற்றுகரம் கெட, இய என்னும் விகுதி தோன்றும்.

உ—ம். சிறு + தகப்பன் = சிறியதகப்பன்.

(சா) வேறே விகாரங்களும் உண்டாகும்.

உ—ம். பசு + கிளி = பைங்கிளி.

## V. APPENDIX TO ETYMOLOGY.

## ௫. ஒழிபியல்.

**122. Compounded and Uncompounded words.**

௧௨௨.—இந்நாலுவகையான சொற்களைப் பகுபதம் என்றும் பகாப்பதம் என்றும் கூறுவது யாது?

பகுக்கப்படாத இயல்பினையுடைய சொல் பகாப்பதம் என்றும், பகுதி விகுதி முதலிய உறுப்புகளால் உண்டாகிப் பகுக்கப்படும் சொல் பகுபதம் என்றும் சொல்லப்படும்.

உ—ம். பொன், நட, நல், கொல், எ—ன, பகாப்பதங்களாம்.

பொன்னன், நடந்தான், நன்மை, அந்தில், எ—ன, பகுபதங்களாம்.

**123. The elements of Compound words.**

௧௨௩.—பகுபதங்களின் உறுப்புகள் எத்தனை?

பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, விகாரம் ஆகிய இவ்வைந்துமே பகுபதத்தின் உறுப்புகளாம்.

உ—ம். கூனி என்பதில், பகுதி—கூன், இ, காண்க.

செய்தான் என்பதில், பகுதி—செய், ஆன், இடைநிலை—த் காண்க.

உண்டனன் என்பதில், பகுதி—உண், விகுதி—அன், இடைநிலை—ட், சாரியை—அன் காண்க.

குணத்தான் என்பதில், பகுதி—குணம், விகுதி—ஆன், சாரியை—அத்து, கெடுதல் விகாரம் காண்க.

124. AUXILIARY VERBS.

*௧௨௪.—துணைவினை ஆவதென்ன?*

தமக்குரிய பற்பல பொருள்களைத் தருவது மன்றி மற்ற வினையெச்சங்களைச் சார்ந்துவரும் வினைகள் துணைவினையாம். இவற்றுள்:

PASSIVE VERBS.

(க) படு, உண் என்னும் வினைகள் செயப் பாட்டுவினையை உண்டாக்கும் துணைவினைக ளாம்.

உ—ம். செய்யப்பட்டது.
உண்ணப்பட்டது.

PERFECT AND PLUPERFECT TENSES.

(உ) இரு என்னும் வினை முற்காலத்தில் முடி வான செய்கையையும் குறித்தகாலத்துக்குமுன், முடிவான செய்கையையும் குறிக்கும்.

உ—ம். கட்டியிருக்கிறான் என்பதில், இரு என்ப தின் நிகழ்காலமானது துணைவினையாகி கட்டின செய்கை முடிவாயிற்று என்று உணர்த்துகிறது.

கொற்றவன் இங்கே வருமுன்னே கட்டியிருந்தான் என்பதில், இரு என்பதின் போனகாலமானது துணைவினையாகி கொற்றன் வந்தகாலத்துக்குமுன் னமே முடிவான செய்கையை உணர்த்துகிறது.

NEGATIVE VERB.

(ங) இரு என்னும் வினை எதிர்மறை வினை

எச்சத்தைச் சார்ந்து எதிர்மறை வினைமுற்ரு கும்.

உ-ம் செய்யாதிருக்கிருன்.
செய்யாமலிருந்தான்.
செய்யாதிருப்பாள் முதலியவும் அப்படியே

PERMISSION.

(௪) ஆம் என்னும் வருங்காலத்து வினைமுற்று, மற்ற வினையின் தொழிற்பெயரைச் சார்ந்து உத்தரவு கேட்கிறதிலும் கொடுக்கிறதிலும் வழங்கும்.

உ-ம். வரலாமா? வரலாம்.

AUXILIARY VERBS WHICH STRENGTHEN OR MODIFY THE MEANING.

(௫) கொள், விடு, போடு, இடு, வரு முதலிய வினைகளும் துணைவினைகளாகி அசைநிலைகளாகவும், சிலவிடத்துத் தமக்குரிய பொருளைத் தருவதாகவும் வரும்.

உ-ம். வாங்கிக்கொண்டேன் என்பது, எனக்காக வாங்கினேன் என்று அர்த்தங்கொள்ளும்.
தருமஞ்செய்துகொண்டு வருகிருன் என்பது, வழக்கமாய்ச் செய்தான் என்று அர்த்தங்கொள்ளும்.
எறிந்துபோட்டான் என்பது, தன்னைவிட்டு நீக்கினுன் என்று அர்த்தங்கொள்ளும்.

அனுப்பிவிட்டான், வந்திட்டேன், } என்பதில், { விடு, இடு என்னும் வினைகள் அர்த்தமின்றி அசைநிலைகளாக வந்தது.

125. DEFECTIVE VERBS.

கஉரு.—குறைவினை ஆவதென்ன?

தெரிநிலை வினைக்குரிய சிலவற்றில் குறைவுற்று வழங்கிய வினை குறைவினையாம். இவைகளின் முறைகளைக் காட்டிய அட்டவணையாவது:

| பகுதி. | விகுதிகளைப் பகுத்துக் காண்க. |
|---|---|
| ஒ, | ஒக்கும், ஒத்து, ஒவ்வ, ஒப்ப, ஒத்த, ஒப்பு, ஒவ்வாது, முதல். |
| வேண்டு, | வேண்டும், வேண்டிய, வேண்டாம். |
| மாட்டு, | மாட்டேன், மாட்டாய், முதல்; மாட்டாது, மாட்டாது, மாட்டாமல். |
| இல், | இல்லேன், முதல்; இல்லை, இன்மை, முதல். |
| அல், | அல்லேன், முதல்; அல்ல, அல்லது, முதல். |
| உள், | உள்ள, உளமை, உண்மை, உள்ளவன், உள்ளவள், உள்ளது, உண்டு, உள. |
| போது, | போதும், போதாது, போதாத, போதாமை. |
| கட, | கடவேன், முதல்; கடமை. |
| தகு, | தகுவேன், முதல்; தக, தக்க, தகும், தகுதி, தக்கவன், முதல்; தகை, தகைமை, தகேன், தகாது, தகாத, முதல். |
| கூடு, | கூடும், கூடாது, கூடாத. |

# III. SYNTAX.

# மூன்றுவது: சொற்றொடரதிகாரம்.

126. SYNTAX.

*கஉசூ.—சொற்றொடர் என்பதென்ன?*

பெயர் முதலிய சொற்கள் வாக்கியமாக ஒழுங்குபடத் தொடர்ந்து நிற்கும் தன்மையே சொற்றொடராம்.

127. A SENTENCE.

*கஉஎ.—வாக்கியம் ஆவதென்ன?*

எழுவாயும பயனிலையும கூடியது வாக்கியம்.

128. SUBJECT.

*கஉஅ.—எழுவாய் ஆவதென்ன?*

வாக்கியத்தின் முதற்பொருள் எழுவாயாம். எழுவாய் என்பது கர்த்தா.

உ—ம். வீடு இடிந்தது என்பதில், வீடு என்பது வாக்கியத்தின் முதற்பொருளாகிய எழுவாயாம்.

129. FINITE VERB OR ITS SUBSTITUTE.

*கஉகூ.—பயனிலை ஆவதென்ன?*

வாக்கியத்தின் முதற்பொருளின் செயலைக் காண்பிப்பது பயனிலையாம்.

129. *THE OBJECT.

*கஉகூ.—*செயப்படுபொருள் ஆவதென்ன?*

ஒரு வினைமுதல் செய்யும் தொழிலை ஏற்கும் பொருளே செயப்படுபொருள் ஆம்.

130. Sentences of one word.

*௧௩௦.—ஒரே சொல் வாக்கியம் ஆகுமா?*

வினைமுற்றிலே மூவிட எழுவாய் தொக்கிருந்து திணை பால் தோன்றுவதால் ஒரு வாக்கியமாம்.

*உ—ம். வருகிறான்.*

131. Finite verb understood.

*௧௩௧.—பயனிலையும் தொக்குவருதலும் உண்டோ?*

பயனிலையும் தொக்குவருவதும் உண்டு.

*உ—ம். நல்லவன் எவன்?*

132. Dependent words.

*௧௩௨.—எழுவாய்க்கும் பயனிலைக்கும் நடுவே வருவது என்ன?*

எழுவாய்க்கும் பயனிலைக்கும் நடுவே பல அடைமொழிகள் வருதலும் உண்டு.

*உ—ம். நல்ல மனிதன் தாழ்மையாய் இருப்பான் என்பதில், மனிதன் என்பது எழுவாய், இருப்பான் என்பது பயனிலை, நல்ல தாழ்மையாய் என்பவை அடைமொழிகள்.*

133. Complex sentences.

*௧௩௩.—எழுவாய் ஒன்றும் பலவும் ஒரு பயனிலையும் பல பயனிலையும் கொள்ளுமோ?*

எழுவாய் ஒன்றும் பலவும் ஓரே பயனிலையும் கொள்ளும், பல பயனிலையும் கொள்ளும்.

**பல பயனிலைகளாகிய வினைகளில் கடைசி வினை மாத்திரம் முற்றுவினையாம்.**

உ—ம். ஆதாமும் ஏவாளும் தோட்டத்தில் இருந்தார்கள் என்பதில், இரண்டு எழுவாயும் ஒரே பயனிலையோடே வந்தது.

ஆதாம் பாவஞ்செய்து நிர்ப்பாக்கியனாகிப் பசாசின் வல்லமைக்குட்பட்டான் என்பதில், ஒரே எழுவாய் மூன்று பயனிலையையும் கொண்டது.

134. CONCORD.

கஙச.—பயனிலை எழுவாயோடே எவ்வாறு இசையும்?

**பயனிலை எழுவாயோடே திணை, பால், இடம் ஆகிய இவைகளில் மாறுபடாமல் இசைவாய் இருக்கவேண்டும்.**

| | |
|---|---|
| உ—ம். நான் | வருவேன். |
| „ குதிரை | வந்தது. |
| மனிதர்கள் | வந்தார்கள். |

135. MANY SUBJECTS.

கஙரு.—பல எழுவாய் வருங்கால் பயனிலை எவ்வாறு முடியும்?

**உயர்திணையாகிய பல சொற்கள் எழுவாயாக அடுக்கிவரில் பயனிலை பலர்பாலாக முடியும்.**

**அஃறிணையாகிய பல எழுவாய் வரில் பயனிலை பலவின்பாலாக முடியும்.**

உ—ம். மனிதனும் ஸ்திரீயும் வந்தார்கள்.
மரமும் கனியும் கெட்டன.

136. Subjects of different persons.

*கங்கு.—வெவ்வேறே இடத்து எழுவாய் அடுக்கி வரில் எவ்வாறும்?*

தன்மையிடத்து எழுவாயோடு முன்னிலை படர்க்கையிடத்து எழுவாய் அடுக்கிவரில் முற்றுவினை தன்மையிடமாம். முன்னிலையிடத்து எழுவாயோடே படர்க்கையிடத்து எழுவாய் அடுக்கிவரில் முற்றுவினை முன்னிலையிடமாம்.

உ—ம். நானும் நீயும் அவனும் போனோம்.
நீயும் அவனும் போனீர்கள்.

137. Exceptions.

*கங்எ.—வழுவமைதி ஆவதென்ன?*

இலக்கண விதிக்கு வேறுபாடாகி, வழுவாக இருந்தும் நூல்களிலே வழங்கிவருகிற நடையாம். சிலவிடத்து ஒருமையில் பன்மையும், பன்மையில் ஒருமையும், ஓரிடத்தில் பிற இடமும் வருதல் உண்டு.

உ—ம். தீ எரிந்தன என்பதில், ஒருமையில் பன்மை வந்தது. பிள்ளைகள் வந்தது என்பதில், பன்மையில் ஒருமை வந்தது. நீயோ, அவனோ ஆர் வந்தார் என்பதில், ஓரிடத்தில் பிற இடம வந்தது.

137. *Interchange of casal signs.

*கங்எ.—*உருபு மயக்கம் ஆவது என்ன?*

ஒரு வேற்றுமை உருபு வேறொரு வேற்றுமைப் பொருளைத் தருவது உருபு மயக்கம் ஆம்.

உ-ம். ஏரின் உழாஅர் என்பது.
ஏரினுல் என பொருள் கொள்ளும்.

138. Honorific forms.

கங்அ. — கொடுந்தமிழிலே மரியாதைப் பன்மை ஆவதென்ன?

கொடுந்தமிழிலே மரியாதையாய் பேசும் பொழுது ஒருமையில் வந்த பன்மை மரியாதைப் பன்மையாம்.

உ-ம். என் தகப்பனுர் வந்தார்.

139. Subject and Verb to agree in திணை.

கங்க.—வெவ்வேறு திணையாகிய எழுவாய்கள் ஒரே வினையோடே வரலாமோ?

வரலாகாது.

உ-ம். மனிதர்களும் குதிரைகளும் வந்தார்கள் என்று எண்ணுமல், குதிரைகளோடு மனிதர்கள் வந்தார்கள் என்ருவது, மனிதர்கள் வந்தார்கள், குதிரைகளும் வந்தன என்ருவது சொல்லவேண்டும்.

140. Use of the third Verbal Participle.

கச0.—மூன்ரும் வினையெச்சம் எவ்வெப்பொருளைத் தரும்?

(க) பொருட்டுப் பொருளைத் தரும்.

உ-ம். அவன் சொல்லப்போனுன் என்பது, அவன் சொல்லும்பொருட்டுப் போனுன் என்பதாம்.

(உ) முக்காலத்துப் பொருளையும் தரும்.

உ-ம். அவர் சொல்ல ஆகும். ஒளிவர இருள் போயிற்று. அப்படியிருக்க நாம் போகவேண்டும்.

(ஈ) வியங்கோள் பொருளையும் தரும்.

உ-ம். ஐயா வர.

(ச) காரணப்பொருளையும் தரும்.

உ-ம். அவன் கேட்க நான் கொடுத்தேன்.

141. FORMS HAVING A SUBJUNCTIVE MEANING.

கசக.—முதலாம் வினையெச்சம் உம் என்பதைப் பெற்றால், எப்பொருளைத் தரும்.

முதலாம் வினையெச்சம் உம் என்பதைப் பெற்றால், உண்மையோடே நிச்சயப்பொருளும் எண்பொருளுமாம்.

உ-ம். நான் சொல்லியிருந்தும் அவன் செய்ய வில்லை என்பது நிச்சயப்பொருள்.

அவர்கள் கூக்குரலிட்டும் அடித்தும் குத்தியும் வந்தார்கள் என்பது எண்பொருள்.

142. FORMS EQUIVALENT TO "ALTHOUGH."

கசஉ.—இரண்டாம் வினையெச்சம் உம் என்பதைப் பெற்றால் எவ்வாறாம்?

இன்மையோடே நிச்சயப்பொருளாய் எதிர் காலத்து முற்றுவினையைக் கொள்ளும்.

உ-ம். நான் சொன்னாலும் அவன் போகமாட்டான்.

143. THE RELATIVE VERBAL MODE.

கசங.—பெயரெச்சம் எவ்வாறு வழங்கும்?

(க) பெயரெச்சமானது தான் சார்ந்த பெயருக்கு உரிச்சொல்லாக வழங்கும்.

உ-ம். படித்த பையன், சிறந்த மனிமை.

(உ) பெயரெச்சமானது தனித்து வழங்குவதும் அல்லாமல், ஒன்றும் பலவுமான அடைமொழிகளோடேயும் வரும்.

உ-ம். வாக்கியத்தில் அடங்கியிருக்கிற பொருள் அவனுக்குத் தெரியாது.

(௩) அநேகம் பெயரெச்சங்கள் ஒரே பெயரைச் சேர்ந்தால், கடைசியெச்சம் தவிர முந்தின வெச்சங்கள் எல்லாம் முதல் வினையெச்சமாகத் திரியும்:

அன்றியும் தெளிவின் பொருட்டு முந்தின பெயரெச்சங்கள் தொழிற்பெயராகத் திரிதலும் உண்டு.

உ-ம். அநேகம் மனிதரைக் காப்பாற்றி, மிகுந்த சத்திரங்களைக் கட்டி, யாவருக்கும் அன்பாய் நடந்து வந்த துரை இறந்துபோனார்.

அநேகம் மனிதரைக் காப்பாற்றினவருமாய் மிகுந்த சத்திரங்களைக் கட்டினவருமாய் யாவருக்கும் அன்பாய் நடந்தவருமாய் இருக்கிற துரை இறந்துபோனார்.

144. Dependent sentences.

கசச.—இடைவாக்கியங்கள் எவை?

எழுவாயும் பயனிலையும் பல அடைமொழிகளுமுள்ள வேறொரு வாக்கியம் வந்தால், அது என்று என்பதினால் பிரிக்கப்பட்டு, முதல் எழு

வாயையும் பயனிலையையும் தழுவி, இடைவாக கியம் என்னப்படும்.

உ-ம். சேவகன் வந்து, கள்ளர் சில பொருள் களைக் கொண்டுபோனார்கள் என்றும், அடுத்த ஊரி லே ஒளித்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும் அறிவித் தான் என்பதில், கள்ளர் சில பொருட்களைக் கொண் டுபோனார்கள் என்ற வாக்கியமும், அடுத்த ஊரிலே ஒளித்துக்கொண்டிருக்கிறார்கள் என்ற வாக்கியமும் இடைவாக்கியங்களாம்.

145. Verbal nouns.

கசரு.—தொழிற்பெயர் எத்தன்மையாய் வரும்?

தொழிற்பெயரானது பெயர்ச்சொல்லின் தன் மையாய் வருவதும் அல்லாமல், வினைச்சொல் லின் தன்மையாயும் வரும்.

உ-ம். தீயோரைக் காண்பதும் தீதே.
சொல்லுதல் யாருக்கும் எளிதாம்.
சொல்லிய வகையைச் செய்யல் அரிதாம்.

146. Present tense used indefinitely.

கசசு.—முக்காலத்துக்குமுரியதான தொழிலுக்கு நிகழ்காலத்து வினைவருமா?

வரும்.

உ-ம். கடவுள் எங்கும் இருக்கிறார்.

147. Present and past for future.

கசஎ.—நிகழ்காலவினையும் போனகாலவினையும் வருங்காலத்தையும் குறிக்குமா?

வினாவினாலே நிகழ்காலவினையும் இறந்த காலவினையும் வருங்காலத்தையும் குறிக்கும்.

உ—ம். வருகிறேன் எ—து சீக்கிரமாய் வருவேன் என்றும் அர்த்தங்கொள்ளும்.

நான் சாப்பிட்டாயிற்று எ—து நான் சாப்பிடுகிறது சீக்கிரமாயாகும் என்றும் அர்த்தங்கொள்ளும்.

148. Past for future.

கசஅ.—போனகாலவினை இன்னும் எப்பொழுது வருங்காலத்தைக் குறிக்கும்?

நிச்சயத்தினால் போனகால வினை வருங்காலத்தையும் காட்டும்.

உ—ம். அப்படிச் செய்தாயேயானால் செத்தாய், நமக்காட ஒரு பாலகன் பிறந்தான், என்பவை நிச்சயமாய்ச் சாவாய் என்றும், நிச்சயமாய்ப் பிறப்பான் என்றும் பொருட்கொள்ளும்.

149. Future for present and past.

கசகூ.—வருங்காலத்து வினை நிகழ்காலத்தையும் போனகாலத்தையும் காட்டுமா?

வருங்காலத்து வினை காரணமில்லாத இயல்பினால் நிகழ்காலத்தையும் போனகாலத்தையும் காட்டும்.

உ—ம். அவன் தருமங்கொடுப்பான்; முன்னோர்கள் பல காரியங்களைச் சொல்லுவார்கள், எ—வை கொடுக்கிறான், சொன்னார்கள் என்பனவாம்.

150. Compound words.

*கருo.—தொடர்மொழி ஆவதென்ன?*

இரண்டுமுதலிய சொற்கள் தொடர்ந்து ஒரு மொழியாக வருவது தொடர்மொழியாம்.

*உ-ம். இராபகல் + ..............=இராப்பகல்,*
*ம்+இல்லாதவன்=ஆதியந்தமில்லாதவன்.*

151. Elliptical and unelliptical phrases.

*கருக. — தொகைநிலையாவதென்ன? தொகாநிலையாவதென்ன?*

வேற்றுமை உருபுகள் முதலியன தொக்கு நிற்கச் சொற்கள் தொடர்ந்துவருவது தொகைநிலையாம்.

வேற்றுமை உருபுகள் முதலியன விரிந்து நிற்கத் தொடர்வது தொகாநிலையாம்.

152. Ellipsis of casal terminations.

*கருஉ.—வேற்றுமைத் தொகையாவதென்ன?*

வேற்றுமை உருபு தொக்குநிற்பது வேற்றுமைத்தொகையாம்.

உ-ம். மரம் வெட்டினன், ஐ என்பது தொக்கு நிற்கிறது.

153. Ellipsis of the signs of person and tense.

*கருங.—வினைத்தொகையாவதென்ன?*

வினை விகுதியும் இடைநிலையும் தொக்குநிற்க வினைப்பகுதிமாத்திரம் வருவது வினைத்தொகையாம்.

உ-ம். கொல்யானை என்பதில், கொல் என்பது கொல்லும், கொல்லுகிற, கொன்ற என்று அர்த்தம் கொள்ளும்.

154. Ellipsis of adjectival terminations.

கருச.—பண்புத்தொகை ஆவதென்ன?

குணப்பெயர் தொக்குநிற்பது பண்புத்தொகையாம்.

உ-ம். செந்தாமரை எ-து செம்மையுள்ள தாமரை என விரியும். பெயர்ச்சொல் எ-து பெயராகிய சொல் என விரியும்.

குணத்தொகை எனவும்படும்.

155. Ellipsis of particle denoting comparison.

கருரு.—உவமைத்தொகையாவதென்ன?

உவமையுருபு தொக்குநிற்பது உவமைத் தொகையாம்.

உ-ம். பொன் மலர் எ-து பொன்னைப்போலும் மலர் என விரியும். (கககூ-காண்க.)

156. Ellipsis of conjunction.

கருசு.—உம்மைத்தொகை என்பதென்ன?

உம் என்பது தொக்குநிற்பது உம்மைத் தொகையாம்.

உ-ம். அவனிவன் எ-து அவனும் இவனும் என விரியும்.

157. Ellipsis of other words.

கருஎ.—அன்மொழித்தொகை என்பதென்ன?

அல்லாத மற்றொரு பெயராவது விகுதியாவது தொக்குநிற்பது அன்மொழித் தொகையாம்.

உ—ம். பூங்குழல் எ—து விரியுங்கால் பூவை அணிந்த குழலாள் என வரும்.

158. The use of முதல் and ஆதி for, &c.

கருஅ.—உம்மைத்தொகையில் முதல், ஆதி என்னும் சொற்கள் எவ்வாறு வரும்?

உம்மைத்தொகையில் பல பெயர்கள் வர, இறுதியில் இருக்கும் பெயர்க்குமாத்திரம் உருபு விரிந்துவரும். சிலவிடத்து அவற்றின்பின் முதலானவை, முதலானவர்கள், முதலியவர்கள், முதலியவைகள், ஆதிகள் என்றும். சொற்கள் வருதலும் உண்டு.

உ—ம். நன்மை தீமைகளுக்கு; மரம் வீடு முதலியவைகள்; இராசா மந்திரி முதலானவர்கள் வந்தார்கள்.

அன்ன வஸ்திராதிகள்.

159. Nouns of number.

கருகூ.—எண்ணுப்பெயர்கள் எவ்வாறு வழங்கப்படும்?

பலவிதமாய் விகாரப்பட்டு வழங்கும். அவ் விகாரங்களைக் காட்டிய அட்டவணையாவது

| | உயிருக்கு முன். | வல்லெழுத்துக்குமுன். | மெல்லெழுத்துக்குமுன். | இடையெழுத்துக்குமுன். |
|---|---|---|---|---|
| ஒன்று. | ஓராயிரம், ஒவ்வொன்று, | ஒருகலம், | ஒருநூல், | ஒருவழி. |
| இரண்டு. | ஈராயிரம், இவ்விரண்டு, | இருகலம், | இருநூல், | இருவழி. |
| மூன்று. | மூவ்வாயிரம், மூவாயிரம், | முக்கலம், | முந்நாழி, | மூவ்யாழ், மூவ்வளை, மூவளை. |
| நான்கு. | நாலாயிரம், | நாற்கலம், | நான்மணி, நன்னான்கு, | நால்யானை. நால்வகை. |
| ஐந்து. | ஐயாயிரம், | ஐங்கலம், | ஐம்மூன்று, | ஐவகை. |
| ஆறு. | ஆறாயிரம், அவ்வாறு, | அறுகலம், | அறுமணி, | அறுவழி. |
| எட்டு. | எண்ணாயிரம், எவ்வெட்டு, | எண்கலம், | எண்மணி, | எண்வளை. |
| பத்து. | பன்னிரண்டு, பதினொன்று, பத்தங்கம், | | பதின்மூன்று. | |

ஒன்றுமுதல் எட்டீறாக நின்ற எண்ணுப் பெயருக்குமுன் பத்து வரில், பது எனத் திரியும்.

உ-ம். ஒருபது, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது.

160. THE CARDINAL POINTS.

௧௬௦.—திசைப்பெயர்களுக்குரிய சிறப்புவிதி எது?

திசைப்பெயர்கள் ஈறுகெட்டும் முதல் நீண்டும் மற்ற மொழிகளோடு புணரும்.

உதாரணம்.

வடக்கு, வட, வடமேற்கு, வடமலை, வடகிழக்கு.
தெற்கு, தென், தென்மேற்கு, தென்மொழி, தென்கிழக்கு.
கிழக்கு, கீழ், கீழ்கடல்.
மேற்கு, மேல், மேல்கடல்.

161. NAMES OF TREES.

கசுக.—சில மரப்பெயர்களுக்குரிய சிறப்புவிதிகள் எவை?

(க) உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வல்லினம் வரில், சிலவிடத்து வல்லினம் இரட்டிக்கும்.

உ-ம். ஆத்தி + காய் = ஆத்திக்காய்.

(உ) சிலவிடத்து இன மெல்லெழுத்துத் தோன்றும்.

உ-ம். மா + காய் = மாங்காய்.

(ங) ஐகார வீற்று மரப்பெயரின் ஈற்றைகாரம் கெட, அம்சாரியை தோன்றும்.

உ-ம். மாதளை + காய் = மாதளங்காய்.

(ச) இகர, உகர, லகரங்களை ஈற்றிலுடைய மரப்பெயர் முன்னும் சாரியை தோன்றும்.

உ-ம். புளி + காய் = புளியங்காய்.
புன்கு + காய் = புன்கங்காய்.
ஆல் + காய் = ஆலங்காய்.

(ரு) தெங்கு என்னும் மரப்பெயர் முன், காய் வரில், ஈற்றுயிர் மெய்கெட்டு, எகரம் ஏகாரம் ஆகும்.

உ-ம். தெங்கு + காய் = தேங்காய்.

162. Synecdoche.

கசுஉ.—ஆகுபெயர் ஆவதென்ன?

ஒரு பொருளையுடைய இயற்பெயரால் அதற்குச் சம்பந்தமான வேறொரு பொருளைத் தொன்றுதொட்டு வருமுறையே வழங்குவன ஆகுபெயராம். இவற்றுள்,

(க) தாமரையின் பூவைத் தாமரை என்பது பொருளாகுபெயர்.

(உ) அகத்தில் இருக்கிற மனதை அகம் என்பது இடவாகுபெயர்.

(௩) கார்காலத்துப் பயிரைக் கார் என்பது காலவாகுபெயர்.

(ச) வெற்றிலை நட்டான் என்பதில், வெற்றிலை என்பது கொடிக்குப் பெயர்; ஆதலால் சினையாகுபெயர்.

(ரு) கார்நிறத்தையுடைய மேகத்தைக் கார் என்பது குணவாகுபெயர்.

(சு) திருவாசகம் என்பதில், வாசகம் என்னும் காரணத்தினால் உண்டான நூலுக்கு வாசகம் என்றும் பெயராம்; ஆதலால் காரணவாகுபெயர்.

(எ) அலங்காரம் என்பது, அலங்காரம் என்னும் இலக்கணமாகிய காரியத்தின் பெயர்; அதின் கருவியாகிய நூலுக்கும் பெயர்; ஆதலால் காரியவாகுபெயர்.

(அ) திருவள்ளுவர் செய்த நூலைத் திருவள்ளுவர் என்பது கர்த்தாவாகுபெயர்.

(கூ) தோகை வந்தாள் என்பதில், தோகை என்று பெண்டுக்குப் பெயரானதால் உவமையாகுபெயர்.

163. Prescription.

*கசுங.—மரபு ஆவதென்ன?*

எந்தப் பொருளை, எந்தச் சொல்லால், எந்த வழியால், அறிவுடையோர்கள் சொன்னார்களோ, அந்தப் பொருளை, அந்தச் சொற்களால், அந்த வழியால் சொல்லுவது மரபு எனப்படும்.

164. The use of படி.

*கசுச.—படி என்னும் சொல் எவ்வாறு வழங்கும்?*

படி என்பது விதம் என்றர்த்தங்கொள்ளும்; ஆகிலும் பெயரெச்சத்தின் இறுதியிலே வருங்கால், படி, படியாக, படிக்கு என்பன பொருட்டுப்பொருளையும், படியினால் என்பது முகாந்தரத்தையும் காட்டும்.

உ-ம். இதை அறியும்படி (படியாக, படிக்கு) வந்தேன்.

நீ இதைச் செய்தபடியால் தண்டிக்கப்படுவாய்.

165. English stops, and other signs.

*கசுரு.—இங்கிலீஷ் இலக்கணத்துக்குரிய நிறுத்தக் குறிப்புகள் முதலிய அடையாளங்கள் சிலவிடத்து தமிழ்நூல்களிலும் வழங்கப்படும்; அவை எவை?*

அவற்றுள் மிக வழங்குவன ஆவன:

, என்பது ஓர்மாத்திரை நிறுத்தம்.

; என்பது இருமாத்திரை நிறுத்தம்.

: என்பது மூன்றுமாத்திரை நிறுத்தம்.

. என்பது நான்குமாத்திரை நிறுத்தம்.

! என்பது அதிசயக்குறிப்பு.

? என்பது வினாக்குறிப்பு.

§ என்பது பிரிவு, அதிகாரத்தின் உள்வகுப்பு.

¶ என்பது வேறே விசேஷத்தைக் காட்டுவதற்குத் துவக்கம்.

166. NEGATIVE PREFIXES.

கசுசு.—அ, அந், நிர் என்னும் கிரந்த விகுதிகள் சொல்லின் முதலிலே என்ன அர்த்தம் கொடுக்கும்?

பெரும்பாலும் எதிரர்த்தங் கொடுக்கும். இவற்றுள், உயிர்முன் அந் என்றும், உயிர் மெய் முன் ன் என்றும், இரண்டின் முன்னும் நிர் என்றும் வரும்.

உ-ம். நிர்ப்பாக்கியம், நிராசாரம்.

அநாதி. அசட்டை.

# IV. PROSODY.

# நான்காவது: யாப்பதிகாரம்.

167. POETRY.

*கசுஎ.—யாப்பு ஆவதென்ன?*

பலவகை மொழிகளை அசை, சீர், தளை, அடி, தொடை என்றிவற்றால் யாப்புற இணைத்து, பல அலங்காரவகையால் சிறப்புப்பொருந்தச் செய்யப்படுவன யாப்பெனப்படும்.

யாப்பு, செய்யுள், பா, பாட்டு, கவி ஒரு பொருட்பெயர்களாம்.

## I. PARTS OF VERSE.

## க. யாப்புறுப்பியல்.

### § க. அசை.

168. METRICAL SYLLABLES.

*கசுஅ.—அசைகள் எத்தனை வகையாம்?*

நேரசை, நிரையசை என இருவகையாம்.

169. SYLLABLES LONG BY NATURE OR POSITION.

*கசுகூ.—நேரசைகள் எவை?*

குற்றெழுத்துத் தனியே வரினும், ஒற்றடுத்து வரினும், நெட்டெழுத்துத் தனியே வரினும், ஒற்றடுத்து வரினும் நேரசையாம்.

உ-ம். க எ-து, குறில் தனியே வந்தநேர்.
கல் எ-து, குறில் ஒற்றடுத்து வந்தநேர்.
கா எ-து, நெடில் தனியே வந்தநேர்.
கால் எ-து, நெடில் ஒற்றடுத்து வந்தநேர்.

170. Short syllables.

கஎ0.—நிரையசைகள் எவை?

குறில் இணைந்து வரினும், குறில் நெடில் இணைந்து வரினும், குறில் இணைந்து ஒற்றடுத்து வரினும், குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்து வரினும், நிரையசையாம்.

உதாரணம்.

அறி எ-து, குற்றெழுத்து இணைந்துவந்தநிரை.
சுறா எ-து, குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் இணைந்து வந்த நிரை.
மரம் எ-து, குற்றெழுத்து இணைந்து ஒற்றடுத்து வந்தநிரை.
விளாம் எ-து, குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் இணைந்து ஒற்றடுத்து வந்த நிரை.

§ உ. சீர்.

171. Metrical feet.

கஎக.—சீர்

இருவகை அசையும் தனித்தும் இணைந்தும் வருவது சீராம்.

172. Classes of metrical feet.

கஎஉ.—அச்சீர் எத்தனை வகைப்படும்?

அசைச்சீர், இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர் என நான்கு வகைப்படும்.

173. FEET OF ONE அசை.

கஎ௩.—அவற்றுள், அசைச்சீர் என்பது யாது?

அசைச்சீர் என்பது ஓரசைச்சீராம். அது நேரசை தானே நின்று நேரசைச்சீர் எனவும், நிரையசை தானே நின்று நிரையசைச்சீர் எனவும் இருவகையாம்.

நேரசைச்சீருக்கு உதாரணை வாய்பாடு நாள். நிரையசைச்சீருக்கு உதாரண வாய்பாடு மலர்.

இவை பெரும்பாலும் வெண்பாவின் ஈற்றிலே வரும். அவற்றோடு முறையே குற்றிய லுகரம் சேர்ந்து காசு எனவும் பிறப்பு எனவும் வருவதும் உண்டு.

174. FEET OF TWO அசை.

கஎ௪.—இயற்சீர் என்பது யாது?

இயற்சீர் என்பது ஈரசைச்சீராம். இவை அகவற்சீர் எனவும்படும்.

அது நேர் நேர், நிரை நேர், நிரை நிரை, நேர் நிரை என நான்கு வகையாம்.

அவற்றிற்குத் தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் உதாரண வாய்பாடாம்.

175. FEET OF THREE அசை.

கஎ௫.—உரிச்சீர் என்பது யாது?

உரிச்சீர் என்பது மூவசைச்சீராம். மேற்கூறிய நான்கின் ஈற்றிலே நேரசையும் நிரையசையும் தனித்தனி கூடிவருதலால் எட்டு வகையாம். அவையாவன:

(க) நேர், நேர், நேர் ....உ-டு ....தே-மாங்-காய்.
(உ) நிரை, நேர், நேர் ....உ-டு ....புளி-மாங்-காய்.
(ங) நிரை, நிரை, நேர் ....உ-டு ....கரு-விளங்-காய்.
(ச) நேர், நிரை, நேர் ....உ-டு ....கூ-விளங்-காய்.

இவை நான்கும் வெண்சீர் எனவும் படும்.

(ரு) நேர், நேர், நிரை ....உ-டு ....தே-மாங்-கனி.
(சு) நிரை, நேர், நிரை ....உ-டு ....புளி-மாங்-கனி.
(எ) நிரை, நிரை, நிரை ....உ-டு ....கரு-விளங்-கனி.
(அ) நேர், நிரை, நிரை ....உ-டு ....கூ-விளங்-கனி.

இவை நான்கும் வஞ்சிச்சீர் எனவும் படும்.

176. Feet of four அசை.

கஎசு.—பொதுச்சீர் என்பது யாது?

நாலசைச்சீர் பொதுச்சீர் எனப்படும். மேற்சொல்லிய நால்வகைப்பட்ட இயற்சீரின் ஈற்றிலே முறையே,

| | | |
|---|---|---|
| தண்-பூ | என | நேர் நேரும், |
| நறும்-பூ | என | நிரை நேரும், |
| தண்-ணிழல் | என | நேர் நிரையும், |
| நறு-நிழல் | என | நிரை நிரையும் |

கூட்டில், பதினாறும்.

இவை பாட்டில் மிகவும் வழங்காவாம்.

ரு ஙு. தளை.

177. Connection of feet.

கஎஎ.—தளை ஆவதென்ன?

சீரோடு சீர் பாட்டிலே தொடர்ந்து வரும் முறையே தளையாம்.

178. THE CONNECTION PECULIAR TO THE ஆசிரியம் METRE.

*கஎஅ.—ஆசிரியத்தளை என்பது யாது?*

**நேரோடு நேரும், நிரையோடு நிரையும் ஒன்றுவது ஆசிரியத் தளையாம்.**

உ—ம். திருமழை தலைஇய,
இருணிற விசும்பின்,
விண்ணதிர் இமிழிசை கடுப்பப்,
பண்ணமைத் தவிர்தேர் சென்றவாறே.

இதில், கருவிளம், கருவிளம்; கருவிளம், புளிமா; கூவிளம், கருவிளம், புளிமா; கூவிளம், புளிமா, தேமா, தேமா; என்று நேர்முன் நேரும், நிரைமுன் நிரையும் வந்தது காண்க.

179. THAT OF THE வெண்பா.

*கஎகூ.—வெண்டளை ஆவதென்ன?*

**மா முன் நிரையும், விளம் முன் நேரும், காய் முன் நேரும் வருவது வெண்டளை**

உதாரணம்.

உருவுகண் டெள்ளாமை வேண்டும்;
உருள்பெருந்தேர்க் கச்சாணி யன்னா ருடைத்து.

இதில் கருவிளம், தேமாங்காய், தேமா, கருவிளங்காய், தேமாங்காய், தேமா, பிறப்பு என வந்தது காண்க.

§ ௪. அடி.

180. LINES.

*கஅ௦.—அடியாவதென்ன?*

**தளையினாலே இணைக்கப்பட்ட சீரோடு வருவது அடியாம்.**

அவ்வடி எத்தனை வகையாம்?

இருசீரால் வரும் குறளடி எனவும்,
மூன்றுசீரால் வரும் சிந்தடி எனவும்,
நாற்சீரால் வரும் அளவடி எனவும்,
ஐந்துசீரால் வரும் நெடிலடி எனவும்,
மிக்கசீரால் வரும் கழிநெடிலடி எனவும்
ஐந்துவகையாம்.

§ ரு. தொடை.

181. Consonance.

கஅக.—தொடை ஆவதென்ன?

அடிகளிலும் சீர்களிலும் எழுத்துக்கள் இசையத் தொடுப்பது தொடையாம்.

182. Rhyme.

கஅஉ.—எதுகைத்தொடை ஆவதெது?

அடிகளில் முதலெழுத்துக்கள் மாத்திரை யளவில் ஒத்துநிற்க, இரண்டாமெழுத்து இசையத் தொடுப்பது எதுகை.

உ—ம். மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

இதிலே மல என்பதற்கு நில என்பது எதுகை ஆம். கட்டென்பதற்கு பட்டென்பது எதுகையாம், பாட்டென்பது எதுகை ஆகாது.

183. Alliteration.

கஅந.—மோனைத்தொடை ஆவதெது?

அடிமுதலெழுத்து மீண்டு வரவும், இன

எழுத்து வரவும் தொடுப்பது மோனை. அவ்வின எழுத்தாவன:

| | |
|---|---|
| அ, ஆ, ஐ, ஔ<br>இ, ஈ, எ, ஏ, யா<br>உ, ஊ, ஒ, ஓ<br>ச, த<br>ஞ, ந<br>ம, வ | ஒன்றுக்கொன்று மோனையாம். |

உ-ம். மேற்கண்ட குறளில் மகரமோனையும் நகர மோனையும் காண்க.

## II. KINDS OF METRE.

## ௨. யாப்பியல்.

184. METRES AND THEIR SUBDIVISIONS.

௧௮௪.—மேற்கூறிய உறுப்பினால் உண்டாகிய விசேஷித்த பாவும் பாவினமும் எவை?

வெண்பா, ஆசிரியப்பா, கலித்துறை, விருத்தம் முதலியவும் உண்டு.

§ ௧. வெண்பா.

185. THE VENBA.

௧௮௫.—வெண்பாவுக்குரிய இலக்கணம் என்ன?

(அ) வெண்பாவிடத்து இயற்சீரும் வெண்சீரும வரும்.

(உ) அளவடியாலே நடக்கும்; ஆயினும் ஈற்றடி சிந்தடியாக வரும்;

(௩) நாள், மலர், காசு, பிறப்பு இந்நான்கில் ஒன்று ஈற்றடியின் ஈற்றுச்சீராம்;

(௪) அதற்கு உரிய தளையாகிய வெண்டளை அன்றிப் பிறதளை வாரா.

186. Kinds of venba.

கஅசு.—வெண்பா எத்தனை வகையாம்?

குறள், சவலை, நேரிசை, இன்னிசை என நான்குவகையாம்.

187. Cural.

கஅஎ.—இவற்றுள், குறள் ஆவதெது?

நாற்சீர், முச்சீர் என இரண்டடி வருவது குறளாம்.

உதாரணம்

கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

188. Savalei.

கஅஅ.—சவலை வெண்பா என்பதெது?

இரு குறள் ஒரு விகற்பத்தால் வருவது சவலையாம்.

உதாரணம்.

அட்டாலும் பால்சுவையில் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

189. Nerisei.

*கஅகூ.—நேரிசை வெண்பா என்பது யாது?*

**இரு குறளும் நடுவே தனிச்சொல்லும் வருவது நேரிசை வெண்பாவம்.**

*உதாரணம்.*

*தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்*
*றெம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை*
*யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று*
*பரிவதூஉஞ் சான்றோர் கடன்.*

190. Innisei.

*சகூ0.—இன்னிசை வெண்பா என்பதெது?*

**நாற்சீர் மூவடியும், மூச்சீர் ஓரடியும் வருவது இன்னிசை வெண்பாவாம்.**

*உதாரணம்.*

*இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது*
*பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி*
*யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்*
*மருவுமின் மாண்டா ரறம.*

## § உ. ஆசிரியப்பா.

191. Asiriyam metre.

*சகூக.—ஆசிரியப்பாவுக்குரிய இலக்கணம் என்ன?*

**(க) இயற்சீரன்றிச சிலவிடத்து வெண்சீரும், தேமாங்கனி புளிமாங்கனி என்னும் இடை நேரிசை வஞ்சிச்சீரும வரப்பெறும்.**

(௨) அதில் தன் தளையன்றி வெண்டளையும் வரும்.

(௩) மூன்றுமுதலிய பல அடிகளான் வரும்.

(௪) ஈற்றடியின் ஈற்றிசையின் ஈற்றிலே ஏகாரம் பெரும்பாலும் வரும்.

ஆசிரியம் எனவும் அகவல் எனவும்படும்.

உதாரணம்.

நீரிடை நுரையி னேர்கெடு மிளமையே;
காரிடை மின்னிற் கடிதிறும் புகழே;
தேரிடை உருளிற் செல்வ மாறுமே;
தாரிடை மதுவினிற் றவிழ்ந்தொழி யின்பமே.

§ ௩. கலித்துறை.

192. Calitureí metre.

௧௯௨.—கலித்துறையின் இலக்கணம் என்ன?

(௧) ஒரே எதுகையான் நெடிலடி நான்குமுடைத்தாகும்;

(௨) வெண்டளையைப் பெறும்.

(௩) ஒவ்வோர் அடியின் முதல் நான்கு சீரும் இயற்சீராகவும், இடைநோசைக் காய்ச்சீராகவும் இருக்கும்;

(௪) ஒவ்வோர் அடியின் ஐந்தாம் சீர் கூவிளங்காய் என்றுவது, கருவிளங்காய் என்றுவது இருக்கும்;

(௫) ஈற்றடியின் ஈற்றிலே ஏகாரம் வரப் பெறும்;

(௬) நேரசை முதலானால் அடியொவ்வொன்றுக்கும் பதினாறு உயிரெழுத்து வரும்;

(௭) நிரையசை முதலானால் அடியொவ்வொன்றுக்கும் பதினேழு உயிரெழுத்து வரும்.

இது கட்டளைக் கலித்துறை எனவும்படும்.

உதாரணம்.

எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கென்னு மிந்தமண்ணுஞ்
சரியெனக் கென்னும் பருந்தோ வெனக்கென்னுந் தானபுசிக்
நரியெனக் கென்னும்புன் னாயெனக் கென்னுமிந் நாறுடலைப்
பிரிய முடன்வளர்த் தேனித னாலென்ன பேறெனக்கே.

§ ௪. விருத்தம்.

193. VIRUTTAM METRE.

—விருத்தத்தின் இலக்கணம் என்ன?

(௧) எல்லாச் சீரும் தழுவும்;

(௨) ஐந்து வகையான அடிகளால் உண்டாகும்;

(௩) தளையின்றி நடக்கும்; ஆயினும் அதற்குரிய பொதுவான விதியாவது: ஓரடியில் தேமா வந்தவிடத்து மற்றோரடியில் தேமா ஆயினும், புளிமாவாயினும் வரும். விளம் வந்தவிடத்து மற்றோரடியில் கூவிளம் ஆயினும் கருவிளமாயினும் வரும். காயீற்றுச்சீருக்குக் காயீற்றுச்

சீரும், கனியீற்றுச்சீருக்குக் கனியீற்றுச்சீரும் வரும். மற்றதும் இவ்வாறே.

*சீர் தம்முள் மாறிவரில் சந்தபேத*

உதாரணம்.

கடுமனவன் பேய்கனவிற கொ..தாகு மலைகளினுங் கடத்தற கொண்ணு
நெடுவயிரத் திறும்வலிது கடல்ட நகி மேருவினை நேரே போததுச்
சடுகனலை விழுங்குகினு கிறுத்தரிது புல்.ஙமு.ஏதுங , எனறு மூலங்
கெடுமுலகீ தன்டெனினுங் டிலதாகி விலதிதனை. கெடுததல் வேண்டும்.



FINIS

முற்றும்.

S. P. C. K. Press, Vepery, Madras -1895.